# திரௌபதி சூள் உரை

(மா பாரதம்)

டாக்டர் **ரா. சீனிவாசன்,**
எம்.ஏ.எம்.லிட்.,பிஎச்.டி

**அணியகம்**
5, செல்லம்மாள் தெரு,
சென்னை - 600 030.

*முதற்பதிப்பு 1996*

*நூல் தலைப்பு* **திரௌபதி சூள் உரை** *(புதுக்கவிதை)*

*ஆசிரியர்* **ரா.சீனிவாசன்**

**விலை ரூ. 30**

---

**பிற நூல்கள்**

| | |
|---|---|
| பரிசுமழை (சிறு கதைத் தொகுப்பு) | ரூ. 25.00 |
| படித்தவள் | ரூ. 25.00 |
| குப்பைமேடு | ரூ. 25.00 |
| திருக்குறள் செய்திகள் | ரூ. 40.00 |
| மொழியியல் (மறுபதிப்பு) | ரூ. 50.00 |
| அணியும் மணியும் (மறுபதிப்பு) | ரூ. 30.00 |
| சொல்லின் செல்வன் (மறுபதிப்பு) | ரூ. 25.00 |
| தெய்வத் திருமகன் (புதுக்கவிதை) | ரூ. 25.00 |
| கம்பராமாயணம் | ரூ. 30.00 |
| மாபாரதம் | ரூ. 30.00 |
| சீவகசிந்தாமணி | ரூ. 25.00 |
| திருவிளையாடற்புராணம் | ரூ. 30.00 |

---

வெளியீடு :

**அணியகம்,** 5, செல்லம்மாள் தெரு, சென்னை -600 030.

*Lasertypesetting :*
Sri Maruthy Laser Printers, 174, Peters Road, Chennai - 600 014.

*Offset Printing :*
Rohini Offset Printers, Chennai - 600 014.

# முன்னுரை

இலக்கியம் படைப்பதில் ஒரு நிறைவு ஏற்படுகிறது. வார்த்தைகளைத் தேடி அமைப்பதில் ஒரு நயம் அமைகிறது; இது எழுத்தின் அடிப்படை; 'நயம்பட உரை' என்பது அவ்வை வாக்கு.

மற்றொன்று நீதிகள் காண்பது; வாழ்க்கைக்கு அவை வழிகாட்டிகள். அவற்றை அறிய எடுத்துக்காட்டுகள் தேவை. அவற்றைத் தருவன நீண்ட இதிகாசங்கள். இவை காலம் காலமாக உரைக்கப்படுகின்றன.

சில நிகழ்ச்சிகளை நியாயப்படுத்தும் பொருட்டு வலிய சில முற்பிறப்புச் செய்திகளைக் கூறினார்கள். அக்காலத்தில் முற்பிறப்பில் நம்பிக்கை இருந்தது. பிறவி உண்டு என்பது இந்த நாட்டு மக்களின் நம்பிக்கை; எனவே முற்பிறவியின் நிகழ்ச்சிகளைக் கூறும்போது சமாதானம் அடைய முடிகிறது.

மற்றும் சில கதைச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு அதீத செயல்கள் கூறப்படுகின்றன. அவற்றை மக்கள் விரும்பினர். 'கடவுள்' என்றால் அவர் அசாதாரண நிகழ்ச்சிகளைச் செய்து தர வேண்டும் என்று எதிர்பார்த்தனர்.

இன்று காலம் மாறி விட்டது; உள்ளதை உள்ளபடி கூறாவிட்டால் இலக்கியம் அதன் நம்பகத்தன்மை இழந்து விடுகிறது. நியாயப்படுத்த வேண்டிய தேவை இன்று இல்லை.

தவறு என்றால் அதைச் சுட்டிக் காட்டுவதையே விரும்பு கின்றனர். இன்று மனிதர்கள் சிந்திக்கத் தொடங்கிவிட்டனர். அவர்கள் அதீத செயல்களை எதிர்பார்க்கவில்லை.

புதுக்கவிதை என்பது இன்றைய புதிய வடிவம். உரை நடையே கவிதை வடிவில் தரப்படுகின்ற ஒன்று. கவிதைக்கு உரிய ஓசையும், உரைநடைக்கு உரிய தெளிவும் அமைந்தது. மிகைபடக் கூறுதல், உயர்வு நவிற்சி இதில் காணமுடியாது.

கூறுவதில் இயன்றவரை நம்பகத் தன்மை இதன் உள்ளடக்கம். சுவைபட இலக்கிய நயம் அமைய எழுதப் பட்டுள்ளது.

இது புதிய வார்ப்பு; புதுக்கவிதை பழங்காவியத்தை எழுதப் பயன்பட்டு உள்ளது; புதிய முயற்சி; எழுத்தில் ஒரு புது மலர்ச்சி.

**- ரா. சீனிவாசன்**

# திரௌபதி சூள்உரை

## 1. முன்வரலாறு

அறிமுகம்

இராமகாதை ''எப்படி
வாழ வேண்டும்?'' இதற்கு
விடை தருவது.

பாரதம் ''எப்படி
வாழக்கூடாது?'' இதற்கு
விளக்கம் தருவது.

''அழுக்காறு என
ஒரு பாவி
அது செல்வத்தை
அழிக்கும்; தீமையுள்
ஆழ்த்தி விடும்.''
இது வள்ளுவர் குறள்;
துரியன் இதற்கு
எடுத்துக்காட்டு.

நீதிகளை உணர்த்துவது
இந்த இதிகாசம்;

நல்லவனாக வாழ்ந்தால்
மட்டும் போதாது;
வல்லவனாகவும்

வாழ வேண்டும்;
இது போதாது;
புத்திசாலியாகவும்
செயல்படவேண்டும்;
அதுதான் கண்ணன்.

நல்லவனாக
வாழ்ந்தவன்
தருமன்; வல்லவன்
அருச்சுனன்;
அறிஞன் கண்ணன்.

கண்ணன் வாழ்க்கைக்கு
வழிகாட்டி; பாண்டவர்
துணைவன்; நன்மைக்குத்
துணை செய்தவன்.

அவன் வழங்கிய
கீதை நன்மொழி
வாழ்க்கை உபதேசம்.

''கடமையைச் செய்.
பலனைக் கணக்கிட்டுக்
கொண்டு இருக்காதே.

ஒவ்வொன்றுக்கும்
இலாப நஷ்டக்
கணக்குப் பார்ப்பவர்
வணிகச் சிந்தையர்;

## 7

கடமையைச் செய்;
அதற்கு முன் எது
கடமை என்று
உறுதி செய்துகொள்.

அதை அறிந்து
தெரிவதற்கு வேண்டிய
மனநிலை பற்றற்று
எதையும் பார்ப்பது''.

இன்று இந்த
உபதேசம் நாட்டுக்குத்
தேவைப்படுகிறது.

பந்த பாசம்
சொந்தம் என்று ஒருசிலர்
பதவிகளில் உள்ளவர்
சொந்த நலம் கருதிப்
பொது நன்மைகளைப்
பாழ்படுத்துகின்றனர்;
அது தவிர்க்கத் தக்கது.

கீதை பொன்மொழி
காந்தியின் நன்மொழி;
அவருக்கு இது வழிகாட்டி.
இது உபதேசித்த
ஞானி கண்ணன்.

வாழ்க்கையை நன்கு
உணர்ந்து தீநெறி

விலகி நன்னெறி
வாழ வழிகாட்டும்
ஒளிவிளக்கு இந்தக் கீதை.

இராமன் சூரிய மரபினன்;
தேய்வு இல்லாத புகழ்
அந்த வாழ்க்கையின் சிறப்பு;
அதற்கு இது உருவகம்.

பாரதக்கதை
இதன் கதாநாயகன்
தீயவன்; துரியோதனன்;
அவன் தேய்ந்த வாழ்க்கை;
சரிந்து விட்டநிலை;

இதன் உருவகம்
அவன் சந்திர குலத்தவன்
என்ற அறிமுகம்.

குரு என்பவன் இந்தக்
குலத்து முதல்வன்;
அவன் மரபினர்
கவுரவர் எனப்பட்டனர்;
குரு என்பதன் திரிபே
கவுரவர் என்பது.

கவுரவர் என்ற பெயர்
திருதராட்டிரன்
மரபினர்க்கு நிலைத்துவிட்டது.

வேறு ஒரு பெயர்
தேவைப்பட்டது;
பாண்டுவின் புதல்வர்
பாண்டவர் எனப்பட்டனர்

**சந்தனு அரசன்**

கங்கைக் கரையில்
அத்தினாபுரி என்ற
நகருக்கு அரசன்
சந்தனு மகாராசன்;

இன்று காதலைப்பற்றிப்
பிரச்சனைகள் வினாக்கள்
எழுகின்றன; அன்று
காதலுக்கு மதிப்புத்தரப்பட்டது.

வீரத்துக்கும் காதலுக்கும்
நெருங்கிய தொடர்பு உண்டு;
கோழைக்குக் காதலிக்கத்
தெரியாது; அதற்குத்
துணிவு தேவைப்படுகிறது.

வாழ்க்கை சாதனைகள்
மிக்கது; சரித்திரம் படைப்பது;
காதல் அதற்குத் தூண்டு
கோலாக அமைவது.

சந்தனு வனவேட்டைக்குச்
சென்றான்; கன்னி வேட்டையில்
அது முடிந்தது.

# 10

கங்கைக் கரையில்
அழகிய நங்கையைக்
கண்டான்; அவளைத்
தொடர்ந்து சந்தித்தான்.
அந்தச் சந்திப்புக்குத்தான்
காதல் என்றுபெயர்.

காதல் என்பது சாதியைக்
கடந்தது; மன்னர்குலத்து
மகளைப் பேசி மணம்
முடிப்பது காதல் ஆகாது;
அது வாழ்க்கை ஒப்பந்தம்.

பெற்றவர் இருந்து அவர்
முன் இருந்து ஒப்புதல்
தெரிவித்து ஏற்படுத்தும்
அரசு உறவுமுறை;
இதற்கு அடிப்படை
அரச வாழ்வு நிலை.
சந்தனு இந்தக் கட்டுக்குள்
அடங்காமல் ''அவள் யார்?
ஊர் எது? பெற்றோர் யார்?''
என்றெல்லாம் கேளாமல்
அவளை மணக்க முன் வந்தான்.

அவள் புதுமைப் பெண்;
தனக்கு என்று சில கோட்பாடுகள்
அவள் வைத்திருந்தாள்;
''அதை விட்டுக் கொடுக்க
முடியாது'' என்று அவனைக்
கட்டுப் படுத்தினாள்.

## 11

அவள் அவனுக்குத்
தேவைப்பட்டாள்;
எதிர் பேசாமல் அவளை
ஏற்றுக் கொண்டான்.

பூவாகிக் காயாகிக்
கனிந்தன குழந்தைகள்;
அவற்றை ஏன்
அவள் கங்கையில்
எறிந்தாள்? புரியாத புதிர்.

பிறந்தவை ஏழு;
அவள் நல்லதங்காளாக
அவற்றை நீரில் எறிந்தாள்.
இவன் 'ஏன்? எது?'' என்று
கேள்வியே கேட்கவில்லை;
சமய வாதிகளுக்கு
அஞ்சிப் பலர் வாய்திறப்பது
இல்லை; அதுபோன்று இருந்தது
அவன் மனநிலை.

பெற்றவன் அவன்;
சுமந்தது அவள்.
தாய்மை என்பது
அவளுக்கு உரியது;
ஏன் எதற்காக
என்று இவன்
வினா எழுப்பவில்லை;
கட்டுக்கு அடங்கி
விட்டுக் கொடுத்தான்.

எட்டாவது கண்ணன்
பிறந்தான்; அது
பாகவதக் கதை.
வீடுமன் கங்கைக்கு
எட்டாவது குழந்தை;
கொழு கொழு என்று
இருந்த மகன்;
அவனைக் கண்டதும்
சந்தனு ஒருபடி
உயர்ந்து விட்டான்.

''தவறு செய்தால்
கண்டிக்காமல் இருப்பது
கோழைத்தனம்'' என்பதை
உணர்ந்து செயல்பட்டான்

அவள் உறவு முறிவுக்கு
அவன் அஞ்சவில்லை;
மகன் அவனுக்குத்
தேவைப்பட்டான்.
அவளும் அவனை மதிக்கத்
தொடங்கினாள்; பாசம்
என்பது காதலை விட
உயர்ந்தது; காதல் தொடக்கம்;
பாசம் முடிவு;
அதற்கு அவள்
மதிப்புத் தந்தாள்.
ஒன்றே ஒன்று அவள்
அவனைக் கேட்டுக்

கொண்டாள்; ''அவனை
வளர்த்து வாலிபனாக
ஆக்கத் தன்னிடமே
விடுக'' எனக் கேட்டுக் கொண்டாள்;
அவனும் சம்மதித்து விடைதந்தான்.

**பரிமளகந்தியை மணத்தல்**

கங்கையை அவனால்
மறக்க முடியவில்லை;
அதில் குளித்து அவனுக்குப்
பழக்கம்; அந்த மகிழ்ச்சி
அவனை விட்டு நீங்கவில்லை.

அவள் நினைவாக அந்தக்
கங்கைக்கரையில்
சுற்றித் திரிந்து உலவி வந்தான்;

அங்கே வளர்ந்த மகன்
வீடுமன்; வரவு கண்டான்;
அவன்தான் தன்மகன்
என்பது அறிந்து கொண்டான்.

அவனைப் பாசத்தால் தழுவிக்
கொண்டான்; வீட்டுக்கு
அழைத்துச் சென்றான்.
கங்கை என்ன ஆனாள்?
எங்கே சென்றாள்?
அது முடிந்த கதை ஆகியது.

மகன் கிடைத்தான்;
மகிழ்ச்சிதான்; அதனால்
இளமை ஆறிவிடுவது இல்லை;
அது சீறிக் கொண்டுதான் இருக்கும்.

அதே நீர்த்துறை;
வரும் போதே
பூக்களின் மணம்
வீசி அவனைக்
கவர்ந்து இழுத்தது.

இந்தப் பரிமளம் யார்?
அவளைக் கண்டான்;
மது உண்ட மந்தியாக
மயங்கிச் சுழன்றான்.

அவள் படகோட்டியின் மகள்;
மீன்பிடிக்கும் தொழில்;
இவன் அரசன்; மாமன்னன்.
இந்த பேதங்கள் வருணங்கள்
தொழிலால் அமைந்தவை;
பேதம் பாராட்டுவது மடமை.
அவள் அவனுக்குத் தேவைப்
பட்டாள்; அவன் அவளுக்குத்
தேவைப்படவில்லை.

அவள் அறிவாளி; அதனால்
அவசரப்படவில்லை.
பெரியவர்களைக் கேட்கவேண்டும்
என்று திசை மாற்றி விட்டாள்;

## 15

அந்தப் படகோட்டி
நாடக வசனம் பேசினான்;
''மீனவன் மகள் என்றால்
ஏன் எவன் என்று கேட்காமல்
இருக்க முடியாது;
அவள் அவன் இச்சைக்கு
இசைவு தரவேண்டுமா?''
பச்சையாகச் சொன்னால்
அது தகாத உறவு.

அணைப்புக்கு அவள்
தேவைப்பட்டால் பிறக்கும்
மகனுக்கு மகளுக்கு
அவர்கள் நிலை என்ன?

''என் பேரன்
மறுபடியும் ஒரு பரதனாகப்
பிறப்பதை விரும்ப மாட்டோம்;
அவன் ஆட்சிக்கு வர
வேண்டும்'' என்று படகோட்டி
நிபந்தனை வைத்தான்.

''ஏன்'டா ஒரு மாதிரியாக
இருக்கிறாய்? எந்தப்
பெண்ணையாவது காதலித்தாயா?''
என்று கேட்க வேண்டிய
தந்தை மகன் முன்
தலை குனிந்து நின்றான்.

தந்தை முந்திக் கொண்டான்;
அவன் பசிக்குச் சோறு போட
மகன் பட்டினி கிடக்கத்
துணிந்தான்; இது
சரித்திரம் காணாத
தியாகம்; பேராண்மை.

விரதத்துக்காகச் சிலர்
காவி கட்டிக்கொண்டு
காரிகையைத் தொடாமல்
தனியர் ஆவது உண்டு;

அதைத் தொடர முடியாமல்
விசுவாமித்திரர்களாக மாறி
மேனகைகளுக்கு
மயங்கி விழுவதும் உண்டு.

தவத்திற்காக அல்ல;
ஞான நிலையின்
முதற்படி என்பதால் அல்ல;
தந்தைக்காகத் தன்னைக்
கட்டுப்படுத்திக் கொண்ட
மாவீரன் அவன்;
யயாதி என்ற மன்னனுக்குத்
தன் இளமையைத் தந்த
தனயன் ஒருவன்
இவன் முன்னோன் உளன்.

மனைவி பக்கத்தில் இருந்தும்
தொடாமல் இளமையைத்
துறந்து நீலகண்டன்
வரலாறு படைத்தான்.
இது பெரியபுராணக் கதை.

தேவவிரதன்
என்பது இவன் இளமைப்பெயர்;
''வீடுமன்'' அதாவது
''உறுதி கொண்ட நெஞ்சினன்''
என்று சிறப்புப் பெயர்
தேவர்கள் அவனுக்கு
இட்டு அழைத்தனர்.

இந்த வீடுமன்
பாரதத்தின் தலைவன்;
திருதராட்டினின் பெரிய
தந்தை; பாண்டவருக்குப்
பாட்டன் ஆவான்.

**பாண்டவர்கள் பிறத்தல்**

பரிமள கந்திக்கு
மற்றொரு பெயர்
சத்தியவதி என்பது.

சித்திராங்கதன் மூத்தமகன்;
விசித்திர வீரியன்
அடுத்த மகன்.
சந்தனு அவளை

விதவையாக்கி விட்டு
அவன் மறைந்தான்.
சித்திராங்கதன் அவன்
சரியாக வளர்க்கப்படவில்லை;
காதல் விவகாரங்களில்
கால் வைத்து வழுக்கி
விழுந்து கொலை உண்டான்;
காந்தருவன் ஒருவனுக்கு
இவன் போட்டியாக
இருந்தான்; அதனால்
அவன் இவனைத்
தீர்த்து விட்டான்.

இந்தக் குடிக்கு எஞ்சியது;
ஒரே மகன்;
விசித்திர வீரியன்.

அவனுக்குக் காசிநகரத்து
அரசன் மகளிர்
அம்பிகை, அம்பாலிகை
இருவரைக் கொண்டுவந்து
வீடுமன் தம்பிக்கு
மணம் முடித்து வைத்தான்.

விசித்திர வீரியனும்
நிரம்ப நாள்
வாழவில்லை;

அகால மரணம் அவனை
அழைத்துச் சென்றுவிட்டது.

சத்தியவதி புத்திசாலி;
கீழ்நிலையில் இருந்து
பதவிக்கு வந்தவள்.

இந்த மேல் மக்கள்
இடும் சட்டம் சம்பிரதாயங்கள்
அவளைத் தடைப்படுத்தவில்லை;

அந்த வமிசத்துக்கு
மகன் தேவை;
என்ன செய்வது?

வீடுமனைக் கேட்டுப்
பார்த்தாள்; அந்த விதவைகளுக்கு
மறுவாழ்வு தரச்சொன்னாள்.
பெண்களைத் தொடாமல் இருந்த
அவனுக்குப் பெண் என்றாலே
தொடத்தகாதவர் என்று ஆகிவிட்டது.

தனிநிலை அவனுக்குப்
பிடித்து விட்டது;
அதுமட்டும் அல்ல;
வாக்குத் தவற அவன்
விரும்பவில்லை;
''முடியாது'' என்று அவன்
மறுத்து விட்டான்.

பாரதக் கதை;
யதார்த்த கதை;
உண்மையை அவர்கள்
மறைக்கவில்லை.

## 20

**வியாசர்விருந்து.**

வியாசர் அவர் மகரிஷி;
வேதங்களை வகுத்த ஞானி;
கல்விக் கடல்.

அரசி சத்தியவதி
அவரை அழைத்து
ஒரு விருந்து வைத்தாள்.
அவர் அருந்த மறுக்கவில்லை.

ஒரு பெண்ணுக்குக்
குழந்தை பெற்றுக் கொள்வது
அவள் பிறப்புரிமை.

கணவன் இல்லை என்றால்
அவள் உலர்ந்து
சருகு ஆக வேண்டியது இல்லை.
வயிற்றில் சுமந்து
குழந்தையைப் பெறுதல்
அவள் பிறந்ததன் பயன்.

மற்றும் கடமை உணர்வு
ஒன்று உள்ளது;
அந்த நாட்டுக்கு
வாரிசு தேவை.

சத்தியவதி அவள்
அவர்களுக்கு அறிவுரை கூறி
ஆயத்தப்படுத்தினாள்.

# 21

அம்பிகைக்கு மகன்
பிறந்தான்; அவன் குருடன்
ஆகப் பிறந்துவிட்டான்.

அம்பாலிகைக்கு ஒரு மகன்;
அவன் சோகையனாகிவிட்டான்.
மற்றொரு மகன் பெற
வியாசன் அழைக்கப்பட்டான்.

தாதி ஒருத்தி கடைசி
நேரத்தில் ஆள்மாறாட்டம்
செய்து உதவினாள்;
அம்பிகை விலகிவிட்டாள்.

அந்தத் தாதிக்கு
விதுரன் பிறந்தான்;
அவன் கல்வி கேள்விகளில்
உயர்ந்து விளங்கினான்.

என்றாலும் விதுரன்
தாதி மகன்;
அவனுக்கு உயர்வாழ்வு
அளிக்கப்படவில்லை.

திருதராட்டிரன் காந்தார
நாட்டு அரசமகள்
காந்தாரியை மணந்தான்;
நூறுமக்களைப் பெற்றாள்.

துரியன் மூத்தவன்;
அடுத்தவன் துச்சாதனன்;
மற்றொரு மகளும்
வாய்த்தாள்; துச்சளை
என்பது அவள் பெயர்.

பாண்டுவுக்கு மக்கள்
ஐவர் பிறந்தனர்;
குந்திக்கு மூவர்;
பாண்டுவின் மனைவி
மற்றொருத்தி மாத்திரி
அவளுக்கு இருவர்.

**பாண்டவரும் கவுரவரும்**

பாண்டு அகாலமரணம்
அடைந்தான்; அதனால்
அவர்கள் அத்தினாபுரிக்கு
அழைத்து வரப்பட்டனர்

திருதராட்டிரன் பார்வை
இழந்தவன்; எனினும்
அவனே மூத்தவன்;
ஆட்சித் தலைவனாயினான்.

அங்கே திருதராட்டிரன்
அவர்களுக்கு ஆதரவு
தந்து சகல நன்மைகளும்
செய்து கல்வி கேள்விகள்
கற்க வழி செய்தான்.

23

## துரியனின் பொறாமை

கிருபனும் துரோணனும்
முறையே அவர்களுக்கு
விற்பயிற்சி கற்பித்தனர்.

தொடக்கத்தில் உறவு
நல்ல நிலையில் இருந்தது;
மெல்ல மெல்லப் பொறாமை;
அதற்குக் காரணம்
பாண்டவர்கள் கல்வி
கேள்விகளில் சிறந்து விளங்கினர்.

கன்னன் தேரோட்டியின்
வளர்ப்பு மகன்.
அவன் சகவாசம்
துரியனுக்குக் கிடைத்தது.

கன்னன் பரசுராமரிடம்
விற்பயிற்சி பெற்றவன்;
விற்பயிற்சியில் சிறந்து
விளங்கினான்; அவன்
துரியனுக்குத் தோழன்
என்பதால் துரியன்
திமிர் படைத்தான்.

வீமனும் துரியனும்
சம வயதினர்;
சம வலியினர்.

செல்வச் சிறப்பு உள்ள
மக்கள் சீர் பெறுவது
இல்லை; அவர்கள்
பொதுவாகப்பின்தங்குவது
பழைய காலத்து இயல்பு.

துரியன் தொடர்ந்து
வீமனுக்குத் தொல்லைகள் தந்தான்;
கொலை முயற்சிகள் பலசெய்து
அவை தோல்வி பெற்றன.

தருமன் அனைவரிலும்
மூத்தவன்; அதனால்
அவனுக்கு இளவரசு
பட்டம் தரப்பட்டது.
அதுதான் பகைக்கு வித்து
ஆகி விருத்தி பெற்றது.

**துரியன் சூழ்ச்சி**

வாரண வாசி
அந்நகருக்குத் தருமனை
அனுப்புவது என்று
துரியன் திட்டமிட்டான்.
துரியன் தந்தையைத் துளைத்து
விட்டான்; அவனைத் தடுக்க
முடியவில்லை; பாசத்துக்குத்
தந்தை அடிமைப்பட்டான்;
அதனால் நாசத்துக்கு அவன்
துணைபோனான்; இது
திருதராட்டிரன் தீயகுணம்.

புரோசனன் ஓர் அமைச்சன்
தருமனுக்குத் துணைவனாக
அனுப்பப் பட்டான்.
அந்தப் புதிய நகரை
ஆட்சி செய்யத் தருமன்
அனுப்பப் பட்டான்.
தம்பியர் உடன் சென்றனர்;
தாய் குந்தியையும் உடன்
அழைத்துச் சென்றனர்.

அவன் அங்கு ஓர்
அரக்கு மாளிகையைக்
கட்டுவித்து அவர்களை
அங்கே குடியிருக்க வைத்தான்.

இந்தச் சூழ்ச்சியை
விதுரன் முன்கூட்டி அறிந்தான்.
அதை வீமனுக்கு எடுத்து உரைத்து
வழி அனுப்பிவைத்தான்.

புரோசனனின் ஒவ்வொரு
செயலையும் வீமன்
கூர்ந்து கவனித்தான்;
அவனை ஓர் இரவு
தங்களோடு இருக்குமாறு
வைத்துக் கொண்டான்.

நள்ளிரவு நணுகியது,
எங்கும் அமைதி;

வீமன் எழுந்தான்;
சகோதரர் நால்வரையும்
தாய் குந்தியையும்
விதுரன் ஏவலால்
சிற்பி அமைத்துவைத்த
சுருங்கை வழியே
வெளியேற்றி அழைத்துச்
சென்று தப்புவித்தான்.
வெளியேறியதும் அந்த
அரக்கு மாளிகைக்குத்
தீ வைத்தான் வீமன்.
அது பற்றி எரிந்தது;
அந்தக் கொடியன்
புரோசனன் கரிந்து செத்தான்;

அவன் திட்டமிட்டுக்
கொண்டு சென்று சேர்த்த
குறவர் ஐவர் அவர்கள்
தாய் ஒருத்தி அவர்களும்
கரிந்து போயினர்;
அவர்களைக் கொண்டு
பாண்டவர்க்கு நஞ்சிட்டுக்
கொல்லுவிக்கத் திட்டம்
வகுத்து இருந்தான்.

**இடும்பன் மரணம்**

'' பாண்டவர்கள் ஐவரும்,
தாய் அவளும்

அரக்கு மாளிகையில்
எரிந்து சாம்பல்
ஆய் விட்டனர்''
என்ற செய்தியைப்
பரப்பித் துரியன்
இரங்கல் விழா எடுத்தான்.

''பாண்டவர்கள் ஒழிந்தார்கள்''
என்று உள்ளுக்குள் மகிழ்ந்து
உற்சாகத்தோடு இருந்தான்.
உயிர் தப்பிய பாண்டவர்
காடு மேடு திரிந்து
இடும்பன் வனம்
என்ற காடார்ந்த
ஊரை அடைந்தனர்.
புதியவர்கள் வருகை
அங்கே ஒரு பெண்ணுக்கு
உவகை உண்டாக்கியது.

இடும்பி என்பது அவள்
பெயர்; அவள் இடுப்பு அழகி;
உரல் போன்ற வடிவு;
பருத்துத் திரண்ட தோள்கள்;
பிடித்து வைத்த உருளைக்
கிழங்கு எனக்கொழுகொழுத்து
இருந்தாள்; அவள் தளதளர்த்த
அழகு வீமனைக் கவர்ந்தது;
அவளை இடுப்பழகி எனக் கொண்டான்.

இருந்தாலும் அவன் அதை
வெளிக் காட்ட வில்லை;
அவள் தன் ஆற்றலை
விளம்பினாள்; தமையன்
வந்தால் உயிருக்கு ஆபத்து
அதற்காகத் தன்னை ஏற்றுக்
கொள்ள அவனை வற்புறுத்தினாள்.

மானம் இடையிட்டது;
அவன் மறுத்துவிட்டான்,
இவர்கள் தருக்க வாதம்
கண்டு குறுக்கே வந்தான்
இடும்பன்; அவள் தமையன்.

தங்கையின் கற்புக்கு
அவன் காவல் பேசினான்;
இருவரும் மற்போர்
கண்டனர்; அவன்
மல்லாந்து விழுந்து மரித்தான்.

இவள் ஓலமிட்டாள்;
அதைக் கேட்டுக் குந்தி
அங்கு வந்து சேர்ந்தாள்.

விசாரணை வைத்தாள்;
அவளுக்கு இனி யாரும்
துணைஇல்லை; அவளுக்கு
அடைக்கலம் தர விரும்பினாள்.;

மகனுக்கு ஏற்றவள்
என்றுகருதினாள்; சகோதரர்
சரி என்று கூறினர்.

இடும்பியை அவன்
மணந்து வாழ்ந்தான்.
முத்து ஒன்று அந்த
நத்தை வயிற்றில்
பின்னால் பிறந்தது;
அவன் கடோற்கசன்.

**பகனின் வதம்**

அடுத்தது அவர்கள் பயணம்
வேத்தர கிரியம்;
அது பார்ப்பனர் இருக்கை.
பஞ்ச கச்சம் கட்டிக்கொண்டு
பஞ்சாங்கம் கையில் ஏந்திப்
பார்ப்பன வீதியில் பழகிச்
சிறிது காலம் கடத்தினர்.

அந்த ஊரில் பார்ப்பனி
ஒருத்தி ஒப்பாரிவைத்து
ஓலமிட்டுக் கொண்டிருந்தாள்.
யாரோ ஒருவர்
கண்மூடிக் கொண்டார் என்று
துக்கம் விசாரிக்கக்
குந்தி சென்று கேட்டாள்.

அங்கே யாரும் செத்து
மடியவில்லை; பின் ஏன்

இவர்கள் கத்தி அழுகிறார்கள்?
அந்த ஊர் எல்லைக்
கோடியில் ஏகாந்தமாக
ஒரு அசுரன் இருந்தான்.

அவன் சாகபட்சினி அல்ல.
மாமிசப் பட்சினி.
புலால் உண்பவன்.
நாளைக்கு ஒருமுறைதான்
உணவு உண்பான்;
ஆனால் அவன் பசியார
உண்பவன்.

அவன் எதிர்பட்ட ஆட்களைக்
கொன்று குவித்துத்
தின்று வந்தான்;
அந்த ஊரார்
அவனிடம் ஒரு சமாதான
உடன்படிக்கை செய்துகொண்டனர்.

''நாள் ஒன்றுக்கு
வீடு ஒன்றாக ஒரு ஆளும்
சமைத்த சோறும்
அனுப்பிவைப்பது''
என்று ஏற்பாடு ஆயிற்று,

வீட்டு வாசல் பெருக்கும்
முறை அந்த வாசலுக்கு
அன்று வந்து சேர்ந்தது.

கணவனை அனுப்பிவைத்தால்
அவள் சுமங்கலி;
தாலி இழந்து அமங்கலி
ஆகவேண்டிய அவலநிலை.

மகன் வீட்டுக்கு ஒருவன்;
எதிர்கால ஒளிவிளக்கு;
அவனை இழந்துவிட்டு
அவர்கள் எப்படி வாழமுடியும்?

மருமகன் வீட்டோடு இருந்தான்;
அவனைத் தொலைத்து விட்டால்
மகள் கதி? அவள்விதி?
யாருக்காக அழுவது?
என்பது அந்த வீட்டுப்
பிரச்சனை; அதுகுறித்துச்
சர்ச்சை வந்தது.

''கவலைப் படாதீர்கள்
என் இரண்டாவது மகன்
வேளா வேளைக்கு வெற்றுச்
சோறு சாப்பிடுகிறான்;

எனக்கு ஐந்துபேர்
பிள்ளைகள்; ஒன்று போனால்
எனக்குக் கவலை இல்லை;
அவனை அனுப்புகிறேன்''
என்று கவலை தீர்த்தாள் குந்தி.

32

ஒற்றை நாடிப் பார்ப்பனச்
சிறுவன் செல்ல இருந்தான்;
இன்று யானைக் குட்டி
அனுப்பப்படுகிறது.

ஊரவர் திரண்டனர்.
உப்புமா இட்லி
கறி சோறு பலமாக இருந்தது;
வண்டி ஒன்றில் ஏற்றி
வீமனுக்குச் சீருடை
உடுத்தி நெற்றியில்
குங்குமம் இட்டுக்
கழுத்தில் பூமாலை போட்டு
பலிக் களத்திற்கு அவனை
அனுப்பி வைத்தனர்.

வேண்டுமென்றே அவன்
காலம் கடத்தி வண்டியை
நாற் புறச் சந்தியில்
நிறுத்தி நரவாசனை
அவனுக்கு எழுப்பி
அவன் வரவுக்குக் காத்திருந்தான்.

இன்று புதிய உணவு
கறி சோறு;
பசிவேறு; வேகமாக
வந்தான்; இவன் அவனைச்

சுவைபார்ப்பதற்கு முன்
அவன் இவனை ஒரு கை பார்த்தான்.

அலறி விழுந்தான்.
இடும்பனின் முடிவை
அடைந்தான் பகன்.

வீமன் பகனாக மாறினான்;
வேண்டிய அளவு அந்த
உணவைத் தான் உண்டு
வீடு திரும்பினான்.

வீமனுக்குக் கருமம்
செய்யத் தருமநூல்
கற்ற புரோகிதர்
காத்திருந்தனர்.

அவன் வருவதை அவர்கள்
நம்பவில்லை; பேய்
எனப் பிறழ்ந்து
உணர்ந்து பின் அவர்கள்
தெளிவு பெற்றனர்.

பகன் இறந்த செய்தி
இடும்பன் மாண்ட கதை
அத்தினாபுரிக்கு எட்டின.

## உ. திரௌபதி சுயம்வரம்

அவள் பிறப்பே
வீர சபதம்;
துருபதன் பாஞ்சால நாட்டின்
மாமன்னன்; அவன்
சிறைப் படுத்தப்பட்டான்.
சீரழிக்கப் பட்டான்.

துரோணன் அவன் திட்டமிட்டு
அவனைத் தேரில் கட்டிக்கொணரச்
செய்தான்; அவன் எடுத்தான்
ஒரு சபதம்; அதை
அவன் முடித்து வைத்தான்.
அதன் எதி ரொலி:

அவனைக் கொல்ல ஒரு
மகனும், வெல்ல ஒரு
மருமகனும் தேடிப்பெறத்
துருபதன் எடுத்த சூள்உரை
அதன் விரிவுரைகள்
இந்த வீரமகள்
அவன் உடன் பிறந்த மகன்.

மண்ணில் பிறந்தவள்;
நிலத்தில் உழும்போது
கிடைத்தவள் சீதை;

அவள் பூமியின்
பொறுமையைத் தாங்கியவள்
ஆறி அடங்கிய கற்பினள்

இவள் சீறிச் செயிர்த்தெழுந்த
சினவேங்கை; கொதித்து
எழுந்த எரிமலை; காளி.

வேள்வித் தீயில் அவள்
உதித்தாள் என்பது கதை;
அது உருவகம்; வீர
சபதத்தில் அவள் உருவானவள்
என்பது அதன் உள்ளடக்கம்.

இந்தக் கதைமாந்தர்கள்
பிறப்புகள் அவற்றின் தொடக்கம்
மறை பொருளாக இருந்தன.

இவள் வளர்ப்பு மகள்;
இவள் உடன் பிறந்த
சகோதரன் திட்டத்துய்மன்
அவனும் வளர்ப்பு மகன்;
இருவரையும் வேள்வித் தீமுன்
தத்து எடுத்தனர்; அவர்கள்
மண்ணின் மக்கள்;
விண்ணில் இருந்து
உதித்த நட்சத்திரங்கள் அல்ல.

பாண்டவர்களுள் இளையவன்
வீரன் அருச்சுனன்;
அவனுக்கே அவளைத் துருபதன்
மணம் முடிக்கக் கருதினான்.

இந்தப் பாண்டவர்கள்
என்ன ஆனார்கள்?
அரக்கு மாளிகையில்
உருக்கி எரிந்த
கரித்துண்டுகள் ஆயினரா?
தப்பித்து வெளியேறினரா?

இரண்டுசெய்திகள்
ஒலிபரப்பப் பட்டன;
இடும்பன் இறந்தான்
பகன் மறைந்தான்
இடிபோன்ற செய்திகள்.

அவர்களை எதிர்த்துப்
போரிட வல்லவர்
உலகில் யாருமே இல்லை.

உலகப் புகழ் பெற்ற
மல்வீரர்கள் இவர்கள்;
இவர்களை வீமன்தான்
கொன்று இருக்க வேண்டும்;
உள் மனம் துருபதனுக்கு
அதனை அறிவுறுத்தியது;

''எப்படியும் அவர்கள்
முகிலைக் கிழித்துக் கொண்டு
வெளிவரும் உதயசூரியனாக
வெளிக் கிளம்புவார்கள்''
என்று அவன் நம்பினான்.

அரசர்களுக்கு எல்லாம்
அறிவிப்பு அனுப்பினான்;
''துருபதன் திருமடந்தை
அவளுக்குச் சுயம்வரம்''
என்ற செய்தியை அறிவித்தார்கள்.

மன்னர்கள் என்ற பெயரோடு
முடிதரித்தவர்கள் எல்லாம் அங்கு
வந்து அடைபட்டனர்;
போட்டியில் வென்று
பரிசுபெற வந்தவர் சிலர்;

காண்பதற்கு நுழைவுச் சீட்டுப்
பெற்று இடத்தை அடைத்தவர்
அவர்களிலும் பலர்;
அந்த அவையில் வந்திருந்த
மிகமுக்கிய மானவர்கள்
அவர்களை அருகிருந்து
செவிலித் தாயர்
அறிமுகம் செய்துவைத்தனர்;

''அதோ வாய் திறக்காமல்
பிடித்து வைத்த பிள்ளையார்
போல் அமர்ந்திருக்கிறானே

தீயவன்; அவன் தான்
துரியோதனன்; இரும்புக்
கரம் அவன் கைகள்!
வில்லெடுத்தால் அவன் திறமை
அற்றவன் என்று தெரிந்து விடும்.
அதனால் அவன் சொல்லெடுத்து
எதுவும் பேசாமல் சொகுசாக
அங்கு அமர்ந்திருக்கிறான்''
என்று அறிவித்தனர்.

அடுத்து அவன் பக்கத்தில்
அமர்ந்திருந்தவன் சகுனி,
''சூழ்ச்சியில் சாணக்கியன்;
நெருப்பை மூட்டுவதில் அவன்
சக்கி முக்கிக் கல்;

எப்பொழுதும் யாரை எப்படிக்
கவிழ்ப்பது; கீழே தள்ளுவது
என்று சதிசெய்து கொண்டிருப்பவன்;
மதிநுட்பம் மிக்க கயவன்;
குள்ளநரி; அவன் பார்வை
அழுத்தம் கொண்டது,

பிறரை அழ வைப்பதில் வல்லவன்.
ஏணியில் ஏறச் சொல்லி
இழுத்துத் தள்ளும் இயல்பினன்.
கோணங்கி, கொடியவன்''
என்று அவனை அறிமுகப் படுத்தினர்,

அடுத்தது அசுவத்தாமன்,
''பேச்சு அதிகம் பேசாதவன்.
அடக்கம் நிறைந்தவன்;
மாவீரன்; அவசரமோ
ஆவேசமோ அவன்
அகராதியில் இல்லவே இல்லை.

ஆனால் ஒன்று; அவன்
அந்தணன்; துரோணன் மகன்;
பிறப்பால் பார்ப்பனன்;
தொழில் சிறப்பால் வில்லாளி;
அழகன்; எனினும் தீமைக்கு
விலை போகும் எளியன்.

அடுத்தது அங்க தேசத்து
அதிபதி கன்னன்;
அவன் கரங்கள் கொடுத்துச்
சிவந்தவை; தோள்கள்
தினவு ஏறியவை;
விழிகள் வீரத்தால்
கொவ்வை இதழ்கள்;
புகழ்ச்சி அவனுக்கு
போதை; அந்த வகையில்
பேதை; ஏமாளியும்
ஆவான்; வள்ளல்
என்று கூறி விட்டால்
உள்ளவை எல்லாம்
வாரிக் கொடுத்துவிடுவான்;

அவனுக்கு உள்ள குறை
வீண் பெருமை;
அவசரப்படுவான்; அதி
ஆவேசம் கொள்வான்.
துரியனின் உயிர்நண்பன்;
நன்றி மறவாத நல்லோன்''
என்று நாநயம்படப்பேசினர்;

பலராமனும் கண்ணனும்
அடுத்து அறிமுகம்
செய்யப் பட்டனர்.
''வசுதேவன் குமரன்
பலராமன் அவன் திருப்பெயர்;
நீலநிற ஆடையன்;
கலப்பைப் படையன்;
வீண் வம்புக்குப்
போக மாட்டான்;
வந்த வம்பை எளிதில்
விடமாட்டான்;
தகைமையாளன்.

கண்ணன் அவன்
தம்பி ஆவான்;
ஆயர் சேரியில்
பிறந்து வளர்ந்தவன்;
கம்சனைக் கொன்று
துமிசம் செய்தவன்.

சத்திய பாமையைக்
காதலித்து மணந்தவன்;

அவன் இங்குப் போட்டிக்கு
வந்தவன் அல்லன்;
அவைக்கு விருந்தினன்''
என்று அறிமுகம் செய்தனர்.

திட்டத் துய்மன்
அரங்கில் ஏறி நின்றான்,
விதிகளைப் படித்தான்.

''அம்பிட்டு இலக்கினை
வீழ்த்தும் இளைஞனுக்கே
துருபதன் மகள் உரியள்''
என்று அறிவிப்புச் செய்தான்.

மேலே மீன் வடிவில்
இருந்தது இலக்கு;
அதைச் சுற்றி வந்த
ஆரைகள் வளைப்பு;
அது சக்கரம் போன்றது.
அதைப் பற்றிய
விளக்கமும் உரைத்தான்.

யானைபோன்ற அரசர்கள்
எழுந்து வில்லெடுத்து
நாண்பூட்ட முயன்றனர்;
இயலாமல் சோற்றுப்பானைபோல
உருண்டு விழுந்தனர்.

தூரியன் எழுந்தான்;
அனைவர் விழிகளும்
அவனையே வளைத்தன.

வில்லெடுத்தவன் நாண்பூட்ட
முடியாமல் நாணித் தலைசாய்ந்தான்;
ஆரவாரம் எதுவும் பெறாமல்
இருப்பிடம் அமர்ந்தான்.

சிங்கக் குட்டி எனச்
சீறி எழுந்த கன்னன்
நிச்சயம் தனக்கு வெற்றி என்று
நிமிர்ந்து நடந்தான்.

அவசரப் பட்டான்; வில்லின்
காம்பினை வளைத்தான்;
நாணைப் பூட்டினான்;
அந்தக் காம்பு
வளைவு நிமிர்ந்து
அவன் தலைமுடியைத்
தரையில் தாழ்த்தியது.

அரிய முயற்சி;
மயிர் இழையில்
நாண் பூட்ட முடியாமல்
அது அவனுக்கு முரண்
செய்தது; தோல்வி அடைந்தான்.

''கார்த்திகைக்குப் பின்னால்
மழை இல்லை;
கன்னனுக்குப் பின்னால்
கொடை இல்லை''
இந்தப் பழமொழிதான்
எங்கும் அவர்களால் பேசப்பட்டது.

முத்துப் போன்ற பல் அழகி
அவளை அடைய
முடியாமல் முடிமன்னர்
ஊமையராய் அடங்கி
அமர்ந்து புழுங்கினர்;
வியர்த்துக் கொட்டினர்.

யாரோ தெரியவில்லை;
மூலையில் இருந்து
ஒரு இடி ஓசை கேட்டது.

''மன்னர்க்கு என்று
வகுத்த இந்த மன்றல்
மண்டபத்தில் அன்னத்தை
அடைய அந்தணர்க்கு
அருகதை உளதோ?''
என்று கேட்டான்;
அவ'ன் விசயன்.

''சாதி இங்கு நீதி
பேசாது; சாதனைதான்
மாதினை அடைய
வழி செய்யும்''
என்று வேந்தன் மகன்
துய்மன் விளக்கம் தந்தான்.

நூல் கற்றதற்கு
அறிகுறி மார்பில்
நூல் அணிதல்;

நூல் அணிந்த
மார்பன் அருச்சுனன்,
வேல் ஏந்தும் மன்னர்போல்
வில் தாங்கி நின்றான்.
அம்பு எடுத்து அதனை
நாணில் பூட்டி வளைத்து
எய்து குறிபார்த்து
அந்த இலக்கினை வீழ்த்தினான்;
மீன் துள்ளிக் கீழே விழுந்தது;
அதை அள்ளி எடுத்துக் காட்டினான்.

மாலை ஏந்திய நங்கை
''மாவீரன் அவன் யார்?
எவன்?'' என்ற வினா ஏதும்
தொடுக்காமல் காந்தம்
போல் அவனை அடைந்தாள்.
மாலை அவள் கரத்திலிருந்து
நீங்கி அவன் சிரத்தில் விழுந்தது.
அவன் மணாளன் ஆயினான்.

வீரர்கள் வியந்தனர்;
மன்னர்கள் மயங்கினர்;
''மறைஓதும் அந்தணன்
கறை எதும் இல்லாமல்
அவளைக் கரம் பற்றுகிறான்''
என்பதால் அவர்கள் சிரம்
தாழ்ந்தனர்; வெட்கப்பட்டனர்.
வேதனைப்பட்டு வெம்பினர்.

சூரியன் துடித்து எழுந்தான்;
எதிர்ப்புக் கொடி தூக்கினான்;
''எங்கிருந்தோ வந்தான்
எரிதழல் ஓம்பும் அந்தணன்;
புரோகிதனாக இருக்கத்தக்கவன்.
இடம் மாறி அமர்வதால்
மன்னர் மகன்கள் கைபிடிக்க
வேண்டிய காரிகை
அவளைப் பேரிகை கொட்ட
வேற்று ஆள் அவன் வந்து
மணம் முடிப்பதா! நீங்கள்

அரசர்கள் என்று சொல்லிக்கொள்ள
வெட்கப்பட வேண்டும்;
சூடு சுரணை இவை எல்லாம்
எங்கே போய் விட்டன?
எழுங்கள்! விழித்து எழுங்கள்!
அவனை ஒழித்துக் கட்டுங்கள்''
என்று வெடிபடப் பேசினான்.

முடங்கிக் கிடந்த
முள்ளங்கி பத்தைகள்
முருங்கைக் காயாக
நிமிர்ந்து நின்றனர்.
அவன்முன் இந்தப் புடலங்காய்கள்
வெடவெடத்து நடுங்கி
ஓட்டம் பிடித்தனர்.

கன்னன் எதிர்க்க
எழுந்தான்; ''அந்தணர்களோடு
போரிடுவது செந்தண்மை ஆகாது''
என்று தத்துவம் பேசித்
தன் மகத்துவம் அடங்கினான்.

அவரவர்கள் விரலை மூக்கில்
வைத்து வியப்புத் தெரிவித்தனர்;
''இவர்கள் அந்தணர்கள் அல்லர்;
அரச மரபினர் தாம்'' என்று
முணுமுணுத்துத் திரும்பினர்.

**குந்தி வரவேற்றல்**

மூத்தவன் தருமன் அவன்
கையகத்து அவளை ஒப்படைத்து
அருச்சுனன் பகைக் களத்தில்
நிலைக்களனாக நின்றான்.
உடன் வீமனும் துணையாயினான்.

சூறாவளி வீசியது;
எங்கும் செடி கொடிகளைத்
தூக்கி எறிந்து விட்டுச்
சலனமற்று அது
அமைந்து ஓய்ந்தது.

ஐவராக அங்குச் சென்றவர்
அறுவராக வீடு திரும்பினர்.
வில்லேந்திக் கனியை உதிர்த்தவனுக்கா
பறித்து அதனைத் தாங்கிய நிலக்

கிழவனுக்கா? அந்தக்கனி
யாருக்கு உரிமை?

வீரம் விளைவிக்க விரும்பினானே
தவிரக் காதலித்து அவளைக்
கைப் பற்றச் செல்லவில்லை.
ஓட்டப் பந்தயத்தில் அவன்
முதல் வந்தான், அதனால்
கிடைத்த பரிசு அவள்.

அன்னைக்கு அதிர்ச்சி தர
அவர்கள் விருப்பம் கொண்டனர்;
''கன்னியைக் கொணர்ந்தோம்''
என்று சொல்ல வேண்டியவர்கள்,
''கனியைக் கொணர்ந்தோம்''
என்று கவிதை மொழியில் கழறினர்.

''ஐவரும் கூறு போட்டுச்
சமமாகப் பங்கிட்டுக் கொள்க''
என்று ஆசி கூறி அழைத்தாள்.

வியப்பு வெளியே
காத்து நின்றது;
ஆரத்தி சுற்றி
அழைப்பு விடுத்து
அடியெடுத்து வர
அவளை வரவேற்றாள்,

தருமன் அதைத் தடுத்து
இருக்கலாம், ஆனால்

தாய் சொல்லியது
தெய்வவாக்கு என்று
சிந்திக்கத் தொடங்கினான்.

அவனுக்கே ஒரு சபலம்
தட்டியது; அவனுக்கு
மணம் செய்து கொள்வதில்
ஆசையும் அரும்பியது.

அருச்சுனனே அவனிடம்
ஒப்புவித்துக் களம் சென்றான்.
கனி பறித்தவனுக்கு
உரிமை அன்று,
தரித்தவனுக்கு; மூத்தவனுக்கு
அவனுக்கு முன்னுரிமை;
அதனால் அவன் அதனை மறுக்கவில்லை.

**துருபதன் அழைப்பு**

பூவையைப் பெற்ற பூபதி
துருபதன் அவர்கள்
பாண்டவர்கள்தாம் என்பதை
ஒற்றரை அனுப்பி அறிந்து கொண்டான்.

''ஐவரும் அவளை மணக்கிறார்கள்''
என்பது அவனுக்கு அருவெறுப்பைத்
தந்தது; தயங்கினான்.

எதற்கும் மகளைக்
கேட்டு முடிவு செய்வது

என்று அவளை அபிப்பிராயம்
கேட்டு அறிய முனைந்தான்.

தருமனைப் பார்த்தாள்;
அவனை அவள் விரும்பினாள்.
தக்கவன் என்று அவள்
மனம் கொண்டாள்;
மறுப்பு அறிவிக்கவில்லை.

குந்திக்கும் கணவன் ஒருவன்
தான்; என்றாலும் அவளுக்குத்
தெய்வங்கள் தலைவர்கள் ஆயினர்;
முன் மாதிரி கண்முன் நின்றது.

தாய் தந்த வார்த்தை
ஐவரும் ஏற்றுக் கொண்டனர்;
அவளுக்கும் தடை ஏற்படவில்லை;
எனவே துருபதன் தடுப்பதற்கு
வழி இல்லாமல் போயிற்று.

மற்றும் அவன் நோக்கம்
அவர்கள் உறவு வேண்டும்;
அருச்சுனன் தன் பக்கம்
இருந்து துரோணனை வீழ்த்த
உதவ வேண்டும்; அது அவன் வேட்கை.

துரோணன் துருபதனின் பகைவன்;
அவர்கள் இருவரும்
பாலிய நண்பர்கள்;

பகல் வேளைச் சாப்பாட்டைப்
பங்கிட்டுக் கொண்டவர்கள்;
பள்ளியில் ஒன்றாகப் படித்தவர்கள்.

இவன் பணக்காரப் பையன்;
அவன் பிற்பட்ட வகுப்பினன்;
அதாவது அந்தண சாதியன்;
வருவாய் மிகுதிப் படாதவன்;
உள்ளம் கலந்து பழகிவிட்டனர்.

இவன் கந்தல் வேட்டி
அவனைச் சிந்திக்க வைத்தது;
''நாடு பிற்பாடு பாதி தருகிறேன்''
என்று வாய்தவறிக் கூறிவிட்டான்;
அதை அவன் அப்பொழுதே
மறந்தும் விட்டான்.
காதல் உரை தரும் இளைஞனைப் போல்.

துரோணன் அவன் மணவாழ்வு
சுமையாகியது;
வறுமை பிடுங்கித் தின்றது.
அசுவத்தாமன் பிறந்தான்.

குழந்தைக்குப் பசும்பால்
வாங்கவும் வசதி இல்லை;
குசேலர் கதை
நினைவுக்கு வந்தது.
இந்தக் குபேரனைக்
காணச் சென்றான்;

ஆடம்பர வாழ்வு;
இந்தத் திகம்பரன் சென்றது
அவனுக்கு அருவெறுப்புத் தந்தது.

பாதி நாடு கேட்டான்;
அவன் இவன் பாகஸ்தன்
என்பதை ஏற்றுக்கொள்ள
மறுத்து விட்டான்.

''வறுமை தீரத் தனக்கு
வாழ்வு வேண்டும்''
என்று தாழ்வுபடக் கேட்டான்;
அவன் செவிகள்
செவிடாகச் செயல்பட்டன.

அன்று அவன் எடுத்த
சூள்உரை; அதற்காகத்
தான் அருச்சுனனுக்கு
ஆசிரியன் ஆயினான்.

அரங்கேற்றம் முடிந்தது;
வில்வித்தையில் விறலோன்
என்ற சிறப்பு எய்தினான் அருச்சுனன்.

ஆசிரியனுக்கு மதிப்புச்
செய்ய மாணவன் விரும்பினான்;
அதற்குக் குருதட்சணை
என்று பெயர் வழங்கினார்கள்.

''துருபதனை வென்று
அவனைத் தேரில் கட்டி
இழுத்து வா'' என்றான் துரோணன்;
அதனை அருச்சுனன் செய்து முடித்தான்.

அன்று துருபதன் எடுத்த
சூள் உரை; அருச்சுனனைத்
தன் மருமகனாக ஏற்பது;
அவனைக் கொண்டு தான்
நினைத்தது சாதிப்பது;

திரௌபதி அவன் பெற்ற
மகள் அல்லள்;
எங்கோ யாரிடமோ
இருந்து எடுத்து
வளர்க்கப்பட்டவள்;

மற்றும் அது அவள்
வாழ்க்கை; விவரம்
அது அவள் முடிவு
செய்து கொள்ள வேண்டுவது
ஐவரை மணக்க
அவன் மறுப்புக் கூறவிலலை.

விவாகமே விசித்திர
மாக நடைபெற்றது;
மணமேடையில் முதலில்
தருமன் அமர்ந்தான்;
அருகில் திரௌபதி.

சடங்குகள் நடந்தன.
அவள் கழுத்தில் தாலி
ஏறியது; அவள் தருமனின்
தருமபத்தினி ஆயினாள்.

அடுத்தது வீமன்;
அருச்சுனன்; நகுலன்;
சகாதேவன் ஐவரும்
கட்டிய தாலிகள்
அவள் கழுத்தை
அலங்கரித்து அழகுபடுத்தின.

''ஐவருக்கும் தேவி
அவள் அழியாத பத்தினி''
என்ற பெயர் நிலைத்தது.

ஒருத்திக்கு ஐவர்
கணவர் என்பது அவள்
ஆரம்ப வாழ்க்கை;

பிறகு மெல்ல மெல்ல
அவர்கள் மனம் மாறினர்
திருந்திய வாழ்க்கை
பெற்றனர்; அவள்
தருமனுக்கே மனைவி
என்பது நடைமுறை
வாழ்க்கை ஆகியது.

தவறுகள் நடக்கலாம்;
ஆனால் அவற்றைத் திருத்திக்
கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

எதையும் மிகுதிப் படுத்தி
எரிச்சல்கள் எழுப்பிக் கொண்டு
விளைச்சல்களை அவர்கள்
உற்பத்தி செய்து கொள்ளவில்லை;
மெல்ல மெல்ல மாறி
அவர்கள் கண்ணியமான
வாழ்க்கையை அடைந்தனர்.

ஐவர் அவளுக்குக் கணவரா?
தருமன் மட்டும் அவள்
கணவனா? இது அறுதி
செய்ய இயலாது.

சடங்கின்படி ஐவர்
கணவர்; அதற்குப் பிறகு
அவர்கள் உறவுமுறைகள்;
அவர்கள் தனிவாழ்க்கை.

ஐவரும் கணவர் என்றால்
இது ஒரு விதிவிலக்கு
என்று கொள்வது தக்கது.

இல்லை தருமன்தான்
கணவன்; மற்றவர்கள்
பொட்டு கட்டியதோடு
நின்றுவிட்டார்கள்
என்பது நியமம்;
அதுதான் அவர்கள்
நடைமுறை வாழ்க்கை.

அருச்சுனன் யாரையும்
காதலிக்காமல் மணந்தது
இல்லை; அடுத்து அவன்
மூவரைக் காதலித்து
மணந்து கொண்டான்;

வீமன் இடும்பியை
மணந்து கொண்டான்;
நகுலன் சகாதேவன்
அவர்களைப் பற்றிய
கதைகள் தெரியவில்லை.

திரௌபதி தருமனின்
தரும பத்தினி;
தருமப்படி பத்தினி;
தருமனின் பத்தினி.
வாழ்க்கையைப் பங்கிட்டுக்
கொண்டவள்; அதனால்
அவள் தருமனின்
வாழ்க்கைத் துணைவியும் ஆவாள்.

**இந்திர ப்பிரத்த ஆட்சி**

பாண்டவர்கள் துருபதனின
மருமகன்கள்; அதனால்
அவர்களுக்குத் தேர் ஏறிச் செல்லும்
ஏர் மிகு வாழ்க்கை அமைந்தது.

அவன் கொடுத்த சீர்கள்
தேர்கள், யானைகள், காலாட்படைகள்.
அவர்களை மன்னர் நிலைக்கு
உயர்த்திக் காட்டின.

துரியன் அவர்கள்
வலிமையை உணர்ந்தான்;
''கூடிக் கெடுப்பது
நாடத் தக்கது'' என்று
முடிவு செய்தான்.

தந்தை திருதராட்டிரன்
அவன் வேண்டுகோளுக்குச்
செவிசாய்த்தான்.

அவர்களை அழைப்பித்துச்
சிறப்புகள் செய்தான்.
மூத்தவன் தருமன் என்பதால்
அவனுக்கு முடிசூட்டித்
திருதராட்டிரன் ஆட்சி தந்தான்.

அவன் வீழ்ச்சியில்
குளிர் காயும்
குரூர மனம் படைத்த
துரியன் அவர்களைக்
கடத்தி வைக்கக் கருதினான்.

காண்டவவனம் என்ற
காட்டுப் பகுதி; அங்கு
அவர்களை அனுப்பி வைத்து
அங்கு ஆட்சி நடத்துமாறு
தந்தையிடம் கேட்டுக்
கொண்டான்; அவனும்
தலையாட்டினான்;
அது அவன் தலைமைநெறி;

அந்தப் புதிய நாட்டுக்குக்
குடிபெயர்ந்தனர்;
காடு திருத்தி அதனை
நாடு ஆக்கினர்.

இந்திரன் நாட்டில்
சிற்பியாக இருந்த
விசுவகர்மனைக்
கொண்டு நகர் ஒன்று
நிருமாணித்தனர்;
அதற்கு இந்திரப்
பிரத்தம் என்று பெயரிட்டனர்;

**அருச்சுனன் தீர்த்தயாத்திரை**

அன்றாட வாழ்வில்
ஒரு திருப்பம்;
அருச்சுனன் எதிர்பார்க்கவில்லை;
கதவு உள் மூடப்படவில்லை.

அவசரமாக உள் நுழைந்து
அம்பும் வில்லும் எடுக்கச்
சென்றான்; அவன் கவனிக்கவில்லை.

மாலை நேரம்; இருள்
கால் கொண்ட வேளை;
அங்கே திரௌபதியின்
சிலம்பு ஒலி கேட்டது;
அது அவள் கால் அசைவில்
ஏற்பட்ட சிருங்கார ஓசை.

தருமன் அவளோடு
உடன் இருந்தான் என்பதை
அறிந்தான், அது அவன்
மனத்தை உறுத்தியது

அண்ணன் முகத்தில் விழிக்க
அவன் விரும்பவில்லை;
தான் உள் சென்றது
தவறு என்பதை உணர்ந்தான்.

தவறுகள் அந்தக் காலத்தில்
பாவச் செயல் என்று கருதப்பட்டன.
அது தீரத் தீர்த்த
யாத்திரை செய்வது பரிகாரம்
என்று கருதப்பட்டது.

அருச்சுனன் தீர்த்த
யாத்திரை தொடங்கினான்;
முதற்கண் அவன் நீராடியது
கங்கைநதி; அதில்
நீராடச் சென்றான்.

அங்கே அதில் குளித்து
எழுந்த கன்னி
''அரைகுறை ஆடையில்
ஒட்டிய சேலையில்
அவன் உள்ளத்தைக்
கவர்ந்தாள்; அவனோடு
கலந்தாள்; அவன்
அவளை மணந்தான்.

அவள் நாக உலகத்துக்
கன்னி உலூபி என்பாள்;
அழகிகள் தேவை என்றால்
அங்கிருந்துதான் வரவழைக்கப்
பெற்றனர்; அவர்கள் இளைஞர்களின்
கற்பனைக் கன்னிகள்.

அவளோடு தொடர்பு கொண்டதால்
விளைவு? நன்மகன் ஒருவனை
அவள் பின் பெற்றெடுத்தாள்;
இரவான் என்பது அவன் பெயர்.

அதன்பின் அவன் பயணம்
தென்குமரியாக அமைந்தது;
தமிழ் இனிய மொழி;
அவள் தமிழ் மகள்; மதுரையில்
சிந்திராங்கதையைச்
சந்தித்தான்; காதல் கொண்டான்.
பாண்டியன் அவனை அழைப்பித்தான்.
அவன் ஆண்டிபோலக்
காவி உடை அணிந்து சென்றான்.

'குமரி ஆட வந்தேன்'
என்றான்; அதற்கு அரசன்
ஒப்புதல் அளித்தான்.

அவன் அருச்சுனன் என்பதை
அறிந்து தமிழ் மகளை அவனுக்கு
மன்னன் பாண்டியன்
மணம் செய்து வைத்தான்.

அந்த வாழ்வில் அவன்
பெற்றெடுத்த நன்மகன்
பப்புருவாகனன் என்பது.
அவன் மாவீரனாகத் திகழ்ந்தான்.

அடுத்தது துவாரகை; அருச்சுனனுக்குக்
கண்ணன் மைத்துனன்; உறவினன்;
கண்ணன் தந்தை
வாசு தேவனுக்கு ஒரு மகள்;
அவள் பலராமன் தங்கை;
'சுபத்திரை' என்பது அவள் பெயர்.

நித்திரையிலும் அவள் அருச்சுனன்
பெயரையே சொல்லி வந்தாள்;
அவன் தீர்த்த யாத்திரை
சென்று உள்ளான் என்பதை
அவள் அறிவாள்.

துவாரகை வந்த
அருச்சுனன் காவி உடை
அணிந்து துறவியாகக்
காட்டிக் கொண்டான்.

அந்த ஊர்ப் பெண்கள்
அவன் பாத பூசை செய்வதற்குக்
காத தூர மிருந்தும்
வந்து சேர்ந்தார்கள்.

கண்ணன் அருச்சுனனைக்
கண்டு கொண்டான்;

அவன் நோக்கத்தையும்
தெரிந்து கொண்டான்.

தங்கை சுபத்திரையை
அங்கு அவனுக்கு வழிபாடு
செய்ய அனுப்பி வைத்தான்;
அவளோடு அவள் தோழி
ஒருத்தியும் உடன் சென்றாள்.

சுபத்திரையின் தோழி
அவனிடம் பேச்சுக் கொடுத்தாள்;
''அடிகளே! உங்கள் தல
யாத்திரையில் ஓர் இளைஞன்;
அர்ச்சுனன்; அவனைக்
கண்டீர்களா?'' என்று
கேட்டு வைத்தாள்.

சுபத்திரையும் உடன்
இருந்தாள். ''சிவகாமி !
அந்தச் சிதம்பரம் நான்
தான்'' என்று வேஷத்தைக்
கலைத்து விட்டுக் காவியன்
காதலன் ஆயினான்.

இருவரும் தேர் ஏறிச் செல்லக்
கண்ணன் துணைநின்றான்;
அவளை அழைத்துக் கொண்டு
இந்திரப் பிரத்தம் வந்து சேர்ந்தான்.

**காண்டவ தகனம்**

நாடு திரும்பியதும் அருச்சுனனுக்குக்
கடமைகள் காத்து இருந்தன;

அவர்கள் வாழ்ந்த பகுதி
மரங்கள், செடிகள், முற்புதர்கள்
சூழ்ந்த வனாந்திரம்.

இன்று ''காடுகளைக் காக்க
வேண்டும்; சுற்றுச்சூழல்
பாதுகாக்கப்பட வேண்டும்''
என்ற குரல் எழுந்து உள்ளது.

அன்று காடு திருத்தி
நாடாக்கும் புதுவளர்ச்சி;
நகர அபிவிருத்தித்
திட்டங்கள்; அவற்றுள்
இது ஒன்று.

காட்டை அழித்து
எரித்து ஒழிக்கும்
பணி அவனிடம் தரப்பட்டது.

காடு சென்று நெருப்பு
மூட்டினான்; வனவிலங்குகள்
தப்பி ஓடி வெளியேறின;
அவை நகருக்குள் புகுந்தால்
உயிருக்குச் சேதம்.
அதனால் அவற்றை மடக்கிப்
போட்டு அங்கேயே
அவற்றை மடிவித்தான்.

மழை விடாமல் பெய்யும்
தண்ணீர் பிரதேசம் அது;

அவ்வப்பொழுது வெள்ளங்கள்
மிகுந்து நெருப்பைத் தடுத்தது.

எரியிட்டுக் கொளுத்துவது
அரிய சாதனையாக இருந்தது;
அங்கே அசுர தச்சன் ஒருவன்
மயன் என்பான் தங்கி இருந்தான்;
அவன் உயிருக்குக் காப்பு அளித்தான்.

மற்றும் ஒரு நாகம்
வேகமாக வெளியேறியது;
அதன் வயிற்றில் ஒரு குட்டி;
அர்ச்சுனன் ஏவிய அம்பு
அந்த நாகத்தைக் கொன்றது;
வயிற்றுக் குட்டி மட்டும்
தப்பிப் பிழைத்துக் கொண்டது.

பாம்பு கருவிக் கொண்டால்
அதைத் தடுக்க முடியாது;
அது அடித்தவரை விட்டு
வைக்காது; காலம் கருதிக்
காத்திருந்து கதையை முடிக்கும்.

தன் தாயைக் கொன்ற
தனஞ்செயன் அவனைப்
பழிவாங்க நினைத்தது;
அதற்கு வழி என்ன என்று
சிந்தித்துக் கன்னனை அடைந்தது;
அவன் அதற்குப் பால்வார்த்து
வளர்த்து வந்தான்.

நாடு திருத்தி நகர்
அமைத்தனர், அதில்
தப்பிப் பிழைத்த சிற்பி
மயன் தன் நன்றிக் கடனாக
அழகிய மண்டபம் கட்டித்
தரத் தன்னை இயைபுபடுத்திக் கொண்டான்.

விட பருவன் என்னும்
அசுரன் கொள்ளை அடித்து
ஒரு பொய்கையில் குவித்து வைத்த மணிகள்
பொன் இவற்றை
அள்ளிக் கொண்டு வரச் செய்தான்.

மயன் தன் சிற்பநூல்
புலமையால்
திறன்மிகு ஆட்களைக்
கொண்டு மின்னல் என்று
ஒளிவிடும் மண்டபத்தைக்
கட்டித் தந்தான்.

மண்டபம் அமைந்ததும்
அதனை விருப்புற்றுக் காண
விண்ணவர் குழுமினர்;
மண்ணவர் திரண்டனர்;
வித்தியாதரர் வியந்தனர்;
''இந்திரன் அமைத்த
அத்தாணி மண்டபம்''
என்று இதனைப் பாராட்டினர்.

கட்டி முடிந்ததும்
புதுமனை புகுவிழா
நடத்தத் தீர்மானித்தனர்.

அதற்கு முன் தம் வெற்றிப்
புகழை எட்டுத் திக்கும்
நிலை நாட்ட விரும்பினர்;
அதற்காக அரசுப் பெருவிழா
அதற்கு ஒரு யாகம் நடத்த
விரும்பினர்; மன்னர்களை
அடிமைப்படுத்தி அவர்களிடமிருந்து
திரைப் பணம் பெற்றனர்;
சக்கரவர்த்தி என மதிக்கப்பட்டனர்.

**சராசந்தன் வதம்**

அட்டதிக்கும் சென்று எதிர்
பட்ட மன்னர்களை வென்று அவர்கள்
கொட்டித் தந்த பொருளைக்
கொண்டு வந்து குவித்தனர்.

கண்ணனுக்கு ஒரு பகைவன்;
அவன் ஆற்றல் மிக்கவன்;
சராசந்தன் என்று அழைப்பர்;
அந்தப் பகையை முடிக்கக்
கண்ணன் கருதினான்.

சராசந்தனை அவன்
நகருக்கே சென்று
அவனை எதிர்த்துப் போரிடுவது
என்று கருதிச் சென்றான்.

கண்ணன் தன்னுடன்
வீமனையும் அருச்சுனனையும்
அழைத்துச் சென்றான்.

அரண்மனை உள்ளே
செல்ல அனுமதி இல்லை.
அந்தணர் வேடத்தில் சென்றால்
தடை செய்ய மாட்டார்கள்.

மூவரும் முந்நூல் அணிந்து,
சிகை முடித்துக் கொண்டு,
பஞ்ச கச்சம் கட்டிக் கொண்டு,
பார்ப்பனராய் உள்நுழைந்தனர்;
சராசந்தன் பார்வையில் பட்டனர்.

நீலநிற வண்ணன்;
கண்ணன்; அவனை அவன்
அடையாளம் கண்டு கொண்டான்.

அவனை வைத்து மற்றவர்கள்
வீமன் அர்ச்சுனன் என்பதையும்
அறிந்து வினவினான்.

அவர்கள் தோள்களில்
தழும்பு இருந்தன;
விற்போர் மற்போரில்
வல்லவர்கள் என்பதை
அவை அறிவுறுத்தின.

கண்ணனை இகழ்ந்து
பேசினான், ''அவன் உயிருக்கு

அஞ்சித் துவாரகைக்கு
ஓடிவிட்டவன்'' என்றான்.

''அருச்சுனன் இளையன்
மற்போருக்கு ஆகான்''
என்று அவனை ஒதுக்கினான்.

திடமான உடலும்
போர் செய்யும் அடலும்
கொண்ட மல்லன் வீமன்
என்பதால் அவனை
மற்போருக்கு அழைத்தான்;
அதற்காக ஒரு களம் குறித்தான்.'

சராசந்தனை யாரும்
வெல்ல முடியாது;
அவன் உடற்கட்டு
வெட்டுக்கு மாளாது;
இருவரும் கட்டிப் புரண்டனர்;
உயரத் தூக்கி எறிந்து
பந்தாடிக் கொண்டனர்;

அவன் உடலைக் கிழித்துப்
போட்டாலும் ஒட்டிக் கொண்டது;
வழி தெரியாமல் திகைத்தான்.

கண்ணன் நடுநிலைமை
பிறழ்ந்தான்; அவனுக்குச்
சைகை காட்டினான்.

புல் ஒன்றைப் பிளந்து
தலைகீழாக மாற்றிப் போட்டான்;
அந்தக் குறிப்பை அறிந்து
அவனைப் பிளந்து
தலைகீழாக மாற்றிப் போட்டான்;

அவன் உடல் ஒட்டவில்லை;
உயிர் பட்டு விட்டது.
அது அவர்கள் சாதித்த
பெரு வெற்றி;
இடும்பன், பகன்
இவர்களோடு இவன்
மூன்றாவது ஆளாக
வீமனுக்கு அமைந்தான்.

**இராசசூயயாகம்**

இனி போர்கள் ஒழிந்தன;
வேள்வி தொடங்குவது
என்று ஏற்பாடுகள் செய்தனர்.

தருமன் யாக வேள்வியில்
தலைமை ஏற்றான்; அவனோடு
மேடையில் திரௌபதி
அமர்ந்து சிறப்பித்தாள்.
அவள் தருமனின்
யாக பத்தினியாக
உயர்வு பெற்றாள்.

மன்னன் துரியன்
அழைக்கப்பட்டான்;

கன்னன்; சகுனி,
துரியன் தம்பியர்,
மற்றும் பல மன்னர்கள்
வந்து குழுமினர்.

விழாவுக்குத் தலைமை
தாங்குவது யார்?
அதற்கு உரிய தகுதி
பற்றிப் பேச்சு வந்தது.

கண்ணன் மதிக்கப்பட்டான்;
அறிஞன்; வாழ்க்கையின்
பலபடிகளையும் கண்டவன்.

திருதராட்டிரன் அந்த
விழாவுக்கு வரவில்லை;
வீடுமன் வந்திருந்தான்;
அவன் ''கண்ணனே
தலைமைக்குச் சால்புடையவன்''
என்று முன்மொழிந்தான்.

எதிர்ப்பு இல்லை; அதனால்
அது ஏற்றுக் கொள்ளப்பட்டது.
சிசுபாலன் கண்ணனுக்கு எதிரி;
உறவுக்காரன்; அவன்
புழுக்கம் கொண்டான்.

விதர்ப்ப தேசத்து அரசன்
பீஷ்மகன் தன் மகளைக்
கண்ணனுக்குத் தர
விருப்பம் கொண்டிருந்தான்.

அவள் பெயர் உருக்குமணி;
அவள் தமையன் உருக்குமன்;
சிசுபாலனின் நண்பன்;
அவளைச் சிசுபாலனுக்கே
கட்டுவது எனக்கட்டுப் படுத்தினான்

கண்ணன் அவளைத் தேரில்
ஏற்றிக் கொண்டு உடன்
கொண்டு சென்று விட்டான்.

அதனால் சிசுபாலனுக்கும்
கண்ணனுக்கும் தீராப்
பகை நிலைத்து இருந்தது.

கண்ணனுக்கு அந்த
ஏற்றம் தர அவன் மறுத்தான்;
இகழ்வுரை பேசி அதனைத்
தடுத்து எதிர்த்தான்.

''இவன் பிறந்தது எட்டாவது;
முன் பிறந்தவர்கள்
எழுவரின் சாவுக்கு
இவனே காரணம் ஆவான்.

''இவன் பிறந்தது
சிறைக் கூட்டிலே;
வளர்ந்தது இடையர் பாடியில்;
பிறப்பில் சிறப்பு இல்லை;
வளர்ப்பில் உயர்வு இல்லை.

இவனைப் பெற்றவர்
சிறைக் கைதிகள்;
அது இவனுக்கு இழிவு.

ஆயர் சேரியில்
இவன் வெண்ணெய் திருடினான்;
கூட்டுச் சேர்ந்து
கொள்ளை அடித்தான்;

இளம் பெண்கள்
உளம் கவர்ந்த கள்வன்;
அவர்கள் பின்னலைப்
பின்னால் இருந்து இழுத்தவன்;

''கருப்பூரம் நாறுமோ
கமலப் பூ நாறுமோ
அவன் திருப்பவள வாய்தான்
தித்தித்திருக்குமோ'' என்று
அறிவு தெரிந்த நங்கையர்
ஏங்கித் தவிக்க வைத்தான்.

உரலில் கட்டி வைத்தால்
இரு மரங்களை
இழுத்துச் சாய்த்தான்;
கட்டுக்கு அடங்காதவன்.

குளித்துக் கரை ஏறக்
காத்திருந்த கன்னியரை
அவர்கள் சேலைகளை
ஒளித்து வைத்து அலைக்கழித்தான்.

அவர்கள் கரை ஏறமுடியாமல்
கரைந்து தவித்தனர்;
நாணத்தின் கரையைக் கடக்க
அவர்களைக் கையேந்தச் செய்தவன்.

கன்றை எறிந்து விளவினைச் சாடினான்;
மாமனை மதித்து நடத்தாமல்
வீமனைப் போல் அவன் மார்பில்
ஏறிக் களிநடம் செய்தான்;

குழல் ஊதிப் பசுக்களை
அழைத்தவன் குழல் மாதரை
அழவைத்து அவர்களை ஏங்க
வைத்த செயல் தாங்க முடியாது.

உருக்கு என்ற
பெயரினள் அவளைத்
தன்னோடு இறுக்கி வைத்துக்
கொள்ள இழுத்துச் சென்றான்.
இவன் தீராத
விளையாட்டுப் பிள்ளை;

சேராது இவனுக்குத் தலைமை''
என்று வற்புறுத்திக் கூறினான்.
''குடிக்கு மூத்தவன்
திருதராட்டிரன் பெரிய தந்தை;
பாட்டன் வீடுமன்;

ஆசிரியன் துரோணன்;
மாமன் சகுனி;

மாவீரன் சல்லியன்;
கொடையாளி கன்னன்; இந்த
மாமன்னர்கள் இருக்க
இந்த இடையன்தானா
கிடைத்தான்? அரச

பாலர்கள் பலர் இருக்க இந்தப்
பசு பாலன் தானா கிடைத்தான்?''
என்று சிசுபாலன் அடித்துச் சொன்னான்.

நூறு பிழைகள் வரை
கண்ணன் பொறுத்து இருந்தான்;
அதற்குமேல் எண் எட்டியது;
அவனை விட்டு வைக்க விரும்பவில்லை.

அவையில் அவனை வெட்டுவது
கூடாது என்று அவைக்கு வெளியே
அழைத்துப் போர் இழைத்து
அவன் சிரசைத்
தன் சக்கரத்தால்
கொய்து அழித்தான்.

கண்ணன் பொறுமை
அவையோரைத் திகைக்க வைத்தது;
வியப்பிலும் திகைப்பிலும்
ஆழ்ந்து நின்றனர்;

சிசுபாலன் கண்ணன்
அத்தைமகன்; அவன் பிறக்கும்
போது அவலட்சணங்கள்

சில அவனை அடைந்திருந்தன;
மூன்று கண்களும்
நான்கு கரங்களுமாகப் பிறந்தான்.

தெய்வங்களுக்கு இவை
அனுமதிக்கப்பட்டன;
மானுடன், அது அவன்
தாய்க்குக் கவலை தந்தது.

கண்ணன் அவனைத் தன்
மடியில் அமர்த்தி
எடுத்து உட்கார வைத்தான்;
அவன் மிகைப்பட்ட
அவயங்கள் அகன்று நீங்கின

கண்ணன்தான் இதற்குக் காரணம்
என்று கருத்துப் பரவியது;
அவனுக்கு நன்றி சொல்லப் பெற்ற
தாய், ''அவனுக்கு உயிர்க்காப்பு
அளிக்க வேண்டும்'' என்று
கேட்டுக் கொண்டாள்.

ஆற்றல் மிக்க கண்ணன்
ஒருவன்தான் அவனை அழிக்க
முடியும் என்று மதிப்பிட்டாள்.

''நூறு பிழை செய்தாலும்
தன் மகனை மன்னிக்க வேண்டும்''
என்று கேட்டு உறுதி
பெற்றுக் கொண்டாள்.

பெற்றதாய் அவளுக்குக்
கண்ணன் தந்த வாக்கு;
அது அவன் போக்கை
அனுமதித்தது; அவனுக்கு
அதற்குமேல் வாழ அவன்
கொடுத்து வைக்கவில்லை.

''நா காக்க; காவாக்கால்
சோ காப்பர்; சொல்லிழுக்குப்பட்டு''
என்பதற்கு அவன்
வாழ்க்கை எடுத்துக்காட்டு ஆகியது.

வேள்வி விழா
விமரிசையுடன் நடந்து
முடிந்தது; துரியன்
அவன் கூட்டத்தினர்
மகிழ்வுடன் கலந்து கொண்டனர்.

பாண்டவர்களின் ஆடம்பரம்;
புகழ் வேட்கை; அதற்காக
அவர்கள் வாரி இறுத்த செல்வம்
துரியனின் அகந்தையைக் கிளறியது.

ஆடம்பர வாழ்க்கை
அது அவர்களுக்குப் பெருமை;
அதே சமயம் அது
கிளறிவிடும் பல சிறுமைகள்.

துரியன் அவன்
பண்டார நாயகன்;

வரவு செலவு கணக்கு;
பொருள் குவியலுக்கு
அவன் அறநிலைக் காவலன்;
அதனால் அது அவனைப்
பொறாமைக்காரன் ஆக்கியது.

கன்னனிடம் மானியத்
துறை வழங்கப்பட்டது;
வாரிக் கொடுப்பதில்
அவன் மேகத்தை வென்றவன்;
கொடுத்து அவன் கரங்கள்
காழ்ப்புக் கொண்டவை;
அது அவனைப் பெருமைப்படுத்தியது;

விழாவில் சில சிறு நிகழ்ச்சிகள்
பத்திரிகைக்காரர்கள் எழுதினர்;
சரிவுகளை எழுவதில்
அவர்கள் என்றும் சமர்த்தர்;

தரை என்று நினைத்து
நீர்த்திரையில் துரியன்
தடுக்கி விழுந்தான்;
நீர் என்று நினைத்து
நிலத்தில் முட்டிக் கொண்டு
இடறி இடர்ப்பட்டான்;

பளிங்குக் கட்டிடம்
அது நிலைக் கண்ணாடியாக
எங்கும் திகழ்ந்தது.

சும்மா இருக்கக் கூடாதா?
'களுக்' என்று சிரித்துவிட்டாள்.
அது 'சுருக்' கென்று
துரியனைத் தைத்தது;
திரௌபதி செய்த தவறு அது.

## 3. சூது போர்

''நேற்று வடை சுட்டு
விற்றவன்; இன்று
வாடகைக் கார்
விட்டுக் கோடிக்
கணக்கில் குவிக்கிறான்''

இது எளியவன் ஒருவன்
ஏற்றம் அடைந்தால்
தூற்றிப் பேசும் பேச்சு.

குப்பத்தில் அவர்கள் கோழி
மேய்ப்பார்கள் என்று
துரியன் எதிர்பார்த்தான்;
அவன் தெப்பம்விட்டுத்
தேர்விழா நடத்தினான்.

இதை இந்தச் சுப்பனால்
தாங்கிக் கொள்ள இயலவில்லை.
அவசரக் கூட்டம்
கூட்டித் தன்பொருமலைத்
துரியன் வெளியிட்டான்;

''கோடிக் கணக்கில்
பொருள் குவித்து
இவர்கள் குபேரர்கள்
ஆகிவிட்டனர்;

எங்கிருந்தோ கற்களை
வரவழைத்துச்
சுவர்களை எழுப்பிவைத்து
அழகு மாளிகைகளைக்
கட்டிக் குவித்துள்ளனர்.

'இடிபொறிகள்' கொண்டு
வந்து அவற்றை இடித்துத்
தள்ள வேண்டும்; அதற்கு
வழி என்ன'' என்று
துரியன் பேச்சுத் தொடங்கினான்.

அண்ணன் எடுத்த உரையை
விரித்து உரைக்க
அவன் தம்பி துச்சாதனன்
குறட்பா ஒன்றை எடுத்துக்
கூறினான்; சாத்தான்
வேதம் ஓதியது.

''இளைதாக முள்மரம்
களைக; காழ்த்த இடத்துப்
பகையை வெல்ல இயலாது;
அது களையுநர்
கைகளை வருத்தும்'' என்றான்.

''அந்த விழாவில் அவர்கள்
யாரை மதித்தார்கள்?
இடையன்; அவன் கடையன்;
அந்த மடையர்கள் அவனுக்குத்
தலைமை தந்தார்கள்; கேள்வி
கேட்ட வேள் சிசுபாலன்
அவன் சிரசைக் கொய்து
விரசமாக நடந்து கொண்டனர்''
என்று அவன் வழிமொழிதலை முடித்தான்.

''போரிட்டு அவர்களை
வேருடன் களைவது
தக்கதுதான்; அதுநமக்கு
இயலாது; அது நம்
இரத்தத்தில் இல்லை;
அது வாய்ப்பேச்சு;
வழி வேறு உண்டா?
அது இழிவு என்றாலும்
ஏற்கத் தக்கது'' என்றான் துரியன்.

முந்திரிக் கொட்டை போல
முனைந்து எழுந்தான்
துரியன் நண்பன் சூரியா.

''போர் அதுதான்
வீரர்க்கு அழகு;
தளபதி யான்
ஒருவனே அவர்களைத்
தவிடு பொடி ஆக்குவேன்;

சூழ்ச்சி; சூது, வாது
இவை கத்தி முனைகள்;

சூது ஆட்டம்; கழைக்
கூத்தாடிகள் வித்தை;
விழுந்தால் படுபாதாளம்;
அது நிலைக்காது'' என்றான்.

ஆசை தீர அவனைப்
பேசவிட்டு அவன்
ஆணவப் பேச்சுக்கு
இடம் கொடுத்தான்
சூழ்ச்சி மிக்க சகுனி,

''மாற்றான் வலியும்,
அவர்தம் ஆற்றலும்,
தம் வலியும்,
சாதித்த சாதனையும்,
சீர்தூக்கிப் பேசுவதே
சிறப்புத் தரும்;

இதுவரை நாம் பெற்ற
மதிப்பெண்கள் யாவை?
தோற்றுப் புறங்காட்டிய
பின்னடைவுகள் எத்தனை?
சாதித்த சாதனை யாது?
எல்லாம் எதிர்மறைக்
கணக்குகளே; தோல்விதான்;

மோது போர் என்பது
எல்லாம் சல்லி விளையாட்டு;
குருதி ஆறு ஓடும்;
செத்தவர் கணக்கு
நாளுக்கு நாள் கூடும்
வெற்றி அடைந்தபின்
திரும்பிப் பார்த்தால்
தெரியும் இழப்புகள்.

செத்தவருக்குச் சமாதி
எழுப்பி வீர வணக்கம்
செய்யலாம்; வீண் செலவு;
இடம் அடைப்பு
விவேகம் அன்று;

கத்தியைத் தீட்டுவதை
விட புத்தியைத் தீட்ட
வேண்டும்; அதுதான்
வெற்றிக்கு வழி'' என்றான்.
அறிஞர் யாரோ கூறிய
பேச்சை இந்தக்
கயவன் சகுனி பயன்படுத்தினான்.

எந்த அறிவுரையும்
ஏற்றத்துக்கும் பயன்படும்;
அழிவுக்கும் ஆக்கப்படும்.

''அரசர்கள் ஆமோதித்த நளன்கதை;
அது நமக்கு முன்மாதிரி;

இழப்புக் கண்ணுக்குப்
புலப்படாது; கத்தியின்றி
ரத்தமின்றிச் செய்யப்படும்
யுத்தம் இது;

ஒரு சொட்டு இரத்தம்
சிந்தாத போர் இது;
கண்ணீர் சிந்தலாம்;
அது விரைவில் ஆறிவிடும்.

மகிழ்வுக் களங்கள் பல;
அங்கு அவர்கள் என்ன
செய்கிறார்கள்? சீட்டு ஆடுகிறார்கள்;
சீர் அழிகிறார்கள்.

பாண்டவர்கள் படித்தவர்கள்
நீதி நெறிகள் போதித்த
தருமநெறிகள் இவற்றை
நெகிழாத நல்லவர்கள்;

ஆட்டத்தில் அவர்கள்
நேர்மை கடைப்பிடிப்பர்;
அது அவர்களுக்குத் தோல்வி
தரும்; சீர்மை குலைந்த
குறுக்கு வழிகள் அவர்களுக்கு
அறிமுகம் ஆகியது இல்லை.

நாம் நீதி நெறிகள் பயிலாதவர்கள்;
வஞ்சனையைப்
பஞ்சணையாகக் கொண்டவர்கள்;

அவர்களை விஞ்ச முடியும்'',
என்று நஞ்சனைய
வார்த்தைகளை வெளியிட்டான்.

அடிப்படைக் கொள்கை
ஒப்புக் கொள்ளப்பட்டது;
செயல் திட்டம் குறித்துச்
சிந்தனை செய்தனர்.

''மண்டபம் ஒன்று கட்டு;
அதன் மாண் அழகைக்
காண ஆள் விட்டு அழை;
அவர்கள் வர மறுக்க
அவர்களால் இயலாது;

வந்தபின் அவர்களை
வளைத்துப் போட
வாகான வார்த்தைகள்
நம்பால் உள்ளன'' என்று
தொடர்ந்து பாங்காகப் பேசினான்.

விதுரன் எதிர்த்துப்
பேசினான்; அவன்
நடுநிலைமை கெடாதவன்.

''வேட்கை பெரிது என்றால்
கேட்கை அது போதும்;
அவர்கள் பொருள் கொட்டித்
தருவார்கள்; கேட்டுப்
பெறுவீர்'' என்றான்.

தட்டிப் பேசுவதைத்
துரியனால் தாங்கிக்
கொள்ள முடியவில்லை.

''வேட்டி சட்டை
இலவசம்; சத்துணவுச்
சாப்பாடு; எங்கள்
மிச்சிலை உண்ணும் நீ
நச்சி அவர்கள்பால்
பேசுகிறாய்; அடங்குக''
என்று ஆரவாரித்தான்.

விதுரனையே செய்தி
கூற அனுப்புவது
என்று முடிவு செய்தனர்;
அவன் சொல்லை அவர்கள்
தட்ட மாட்டார்கள்
அவனிடம் பொறுப்பை
ஒப்படைத்தனர்.

**விதுரன் பயணம்**

''மண்டபம் காண
வருக'' என்று அழைப்பு
விதுரன்பால்
அனுப்பி வைத்தனர்;
அதற்குமேல் அவர்களிடம்
எதுவும் கூற அவனுக்கு
அனுமதி இல்லை;
அதை விதுரன்
பொருட்படுத்தவில்லை.

வரவேற்பு அளித்த
பாண்டவர்பால்
கொண்டு சென்று
செய்தியை உண்டு
எதுவோ அதுமட்டும்
கடமை கருதி
அறிவித்தான்.
என்றாலும் அவன்
மனச்சான்று
அடக்கத்தை மீறியது.

அதன் உள்ளடக்கத்தை
விவரித்துக் கூறினான்;
அவர்கள் திட்டம்
தீயது என்பதைச்
சுட்டிக் காட்டினான்.

''சூது ஆடவே
அவர்கள் அழைக்கின்றனர்;
அங்கே நீர்
விழிப்புடன் செயல்படுக''
என்று விவரம் தந்தான்.

சூதின் தீமைகளை
அவன் அடுக்கிக் கூறினான்;
அதனால் ஒடுங்கும் நன்மைகள்
இவை என்று எடுத்துக் காட்டினான்.

''அடிமையும், ஆண்மையும்,
வலிமையும், சேனையும்,

அழகும், வெற்றியும்,
தத்தம் குடியும்,
மானமும், செல்வமும்,
பெருமையும், குலமும்,
ஒளியும், நல்லொழுக்கமும்,
புகழும், பயின்ற கல்வியும்
இவை அனைத்தும்
தொலையும், மடியும்''
என்று தீமைகளைக் கூறினான்.

தருமன் தருமம்
அறிந்தவன்; அவனுக்கு
இவை கூறுவது மிகை;
என்றாலும் அவற்றை
அமைதியாகக் கேட்டான்.

''அவர்கள் திட்டம் எது?
அது இப்பொழுது நம்
சிந்தனைக்குத் தேவை இல்லை.

அழைப்பு அதை
நாம் மதிப்பது
கடமை; அவர்கள்
நம் சகோதரர்கள்''
என்று பாசம் பேசினான்.

''மற்றும் தந்தை பெரியவர்;
திருதராட்டிரர் அழைப்பு;
அதனை மறுப்பது

தவறு இழைப்பு''
என்று தன் கருத்தைக்
கூறினான் நிதானமாக.

தம்பியர்கள் தடுத்துப்
பார்த்தனர்; ''தீமை
அடுத்து வரும்'' என்பதை
அறிந்து கூறினர்.

''மூத்தவர் சொல்
அமுதம்; அதனை
ஏற்று நடப்பது
விழுமிது'' என்றான்.

பயணம் அதற்குத்
தொடக்கம் தந்தான்;
அன்னை குந்தியை
உடன் அழைத்துச்
செல்ல வில்லை.

மண்டபம் காண
என்பதால் மங்கல நிகழ்ச்சி
உடன் சென்றாள்
ஐவருடன் திரௌபதி;
உறவுக்காரர் என்றால்
உவ்கை; அது அவளுக்கு
வாய்ப்புத் தந்தது.

மற்றும் மணம் முடிந்து
மரபினர் அழைக்கும்
அன்பு அழைப்பு;

செல்வமும் பாசமும்
மிக்க மாமி; மாமன்;
மைத்துனர்கள்; சிறப்பாகக்
காந்தாரியைக் காண
அப்பொழுது விழைந்தாள்.

காந்தாரியின் பெருமை
பார் எங்கும் பேசப்பட்டது;
கணவன் கண் இழந்தான்
என்பதால் அவளும் தன்
கண்ணுக்கு இருட்டைத்
தேடிக் கொண்டவள்;
முரட்டுத் துணியால் கண்ணைக்
கட்டி மூடிக் கொண்டவள்.

பிள்ளைகள் நிறைய
பெற்றவள், தாய்மை முற்றிக்
கனிவு நிரம்பியவள்.
அதனால் அவள் ஆசி
பெற அவாவிச் சென்றனள்.

குருட்டுத் தந்தை;
கள்ளச் சிந்தையன்;
அவர்களை அன்புடன்
உபசரித்துத் தழுவி
நலம் விசாரித்து
நன்மைகள் காட்டினான்.

''வேள்வி நடந்தது;
யான் வர இயலாமல்

'போயிற்று; மூப்பு
அதுதான் யாப்பு''
என்று வாய்ப்பு
இழந்தமைக்கு அவன்
வருத்தம் தெரிவித்தான்.

காந்தாரியை வணங்க
திரௌபதி சென்றாள்;
மாமியும் மருமகளும்
கதைகள் பலபேசிக்
கலந்து உரையாடினர்.

தருமன் மண்டபத்தைக்
கண்டு வாயாரப் புகழ்ந்தான்;
சிற்பத்தை வியந்தான்;
திட்டமிட்டுக் கட்டிய
சீர்மையைப் பாராட்டினான்.

''இதற்கு நிகர்
அளகையிலும் இல்லை''
என்று வானளாவப் புகழ்ந்தான்.

வார்த்தைகள் பேசுவதற்குப் புதியவை
கிடைக்கவில்லை;
பரபரப்பு இல்லாத காலம்.
உண்டு இளைப்பாறி
ஆசனங்களில் அமர்ந்து
பாக்கு வெற்றிலை மடித்துத்
தின்றுமென்று பொழுது கழித்தனர்.

நாட்டு நிலவரங்கள்,
மழை வெள்ளங்கள்,
உலக அரசியல்,
தான தருமங்கள்
இவற்றைப் பேசி முடித்தனர்.

கொலைகள், குற்றங்கள்,
வழக்குகள் இன்று
பேசப்படுகின்றன.
அன்று தரும சாத்திரங்கள்,
நீதிகள், நெறிகள்
இவர்கள் பேச்சில்
இடம் பெற்றன.

காயை உருட்டிப்
பலகையை விரித்தான்; அதன்
புள்ளிகள் அவை
கண்ணி வெடிகள்.

''இதை உருட்டிக் கொண்டே
இன்பப் பொழுது
கழிக்கலாம்'' என்று
சகுனி தொடுத்தான்.

தருமன் எதிர்பார்த்தான்
தற்காப்போடு பேசத் தொடங்கினான்;
''ஏன்? வேறு நல்ல
விஷயங்கள் நாலாயிரம்
இருக்கின்றன; இந்தச்
சூது தீது'' என்றான்.

''ஏன்? பொருள் இழப்புக்கு
அஞ்சுகிறாயா?'' என்று
பழிப்புத் தோன்றத்
துரியன் அழித்துக் கூறினான்.

''பொருள் அது தேவை
என்றால் நீ எடுத்துக் கொள்;
இதற்கு இந்த ஆட்டம்
வேண்டியது இல்லை''
என்று சுட்டிக் காட்டினான்.

''ஆடுவதற்கு அஞ்சுகிறான்;
தோல்விக்கு அவன்
மனம் உலைகிறான்;
கோழை'' என்று
சகுனி குத்திவிட்டான்.

''இல்லை; வீடு கட்டி
விழா எடுத்து
ஏகப்பட்ட கடன்;
உள்ள பொருள்
அனைத்தும் வாரி
இரைத்து விட்டான்;
பாவம்; ஏழ்மை''
என்று எளிமைப்படுத்தி
உரை தொடுத்தான் துரியன்.

மானம் அது
தூண்டப்பட்டது;
இகழ்ச்சிக்கு அவன்

எளிமைப்படவில்லை;
வீரம் தலை எடுத்தது.

இரண்டு உந்தல்கள்;
தன்னைக் கோழை
என்பதை அவனால்
ஏற்றுக் கொள்ள
இயலவில்லை;
மற்றும் ஏழை
என்ற இகழ்வுரை
அவனைத் தூண்டிவிட்டது.

பொய்யான மானம்;
மற்றவர்கள் என்ன
நினைக்கிறார்கள்?
நினைப்பார்கள்?
இதற்காகவே வாழ்ந்து
கெடுபவர் பலர்;
நல்லது கெட்டது
என்ற சிந்தனை
அவர்களை விட்டு அகல்கிறது.

''காயை உருட்டத்
தெரியாதவர் வில் சாய்த்து
நாண் எங்கே பூட்டப்
போகிறார்கள்? காய்
எடுத்து நகர்த்தத் தெரியாதவர்
கரி, பரி, தேர், ஆள்
இவர்களை எப்படி

வகுக்கப் போகிறார்கள்?''
என்று வில் உண்டாக்கும்
வடுவினைச் சொல்லில்
உண்டாக்கினான் கன்னன்;
சூரியன் மகன் சூரியா.

''ஆடுவதற்கு வட்டம்
அத்தினாபுரியையே
வைக்கிறேன்'' என்றான்
திரௌபதியின்
வத்திரம் கவரக் கருதிய
கயவன்; கண்ணிலான் மகன்.

அவன் நோக்கமே
நாடு அன்று,
பொருள் அன்று;
அவர்களை அவையில்
நிறுத்தி வைத்து
இகழ்ந்து பேசுதல்.

அருச்சுனன் அறிவுரை
கூற முனைந்தான்;
அடக்கம் காரணமாக
அமைதியாயினான்;
வீமன் உருத்து எழுந்தான்;
தருமன் கருத்து
அறிந்து, ''விதி இது''
என்று கைகட்டிக் கொண்டான்.

எதிர்ப்புகள் தம் பக்கம்
மிகுதியாக வரத்
தருமன் நிலைமறந்தான்;
ஆதிக்கம் ஓங்கியது,
வட்டு ஆடும் பலகை;
அதில் உருட்டி விடும்
காய்கள்; அவற்றின்
சலசலப்பில் தன்னை
மறந்தான்; அறம் துறந்தான்.

ஒட்டு என்று வைத்தான்,
பட்டு என்று அதுபோயது;
தூண்டில் முள் புழு
அதைத் தின்ன வரும் மீன்
அதிலிருந்து தப்பியது இல்லை.

இழக்கும் தோறும்
இழுத்துப் பிடிக்கும்
சூது; அது தீது;

''இழந்தவற்றை ஒரே
ஆட்டத்தில் மீட்டுப்
பெற்று விடலாம்''
என்ற வேகம்.

அழிந்தது அவன் விவேகம்.
வீடு, மனை, நாடு
ஆட்சி அனைத்தும்
துறந்தான்;

ஒன்றும் இல்லாவிட்டால்
உடல் உழைப்பு;
அதுபோதும்;
நடத்தலாம் பிழைப்பு;
அதுவும் இழைத்தான்; இழப்பு.

தம்பியர் நால்வர்
கொத்தடிமைக்கு
அவர்களை ஒட்டு வைத்தான்.

கூண்டுக்குள் புலிகள்
அகப்பட்டுச் சிக்கிக்
கொண்டன; அவை
வெளியேற இயலாது.

கைதட்டிச் சிரித்தான்;
''பொருள் ஏதும் இல்லையோ''
என்று எள்ளி
நகைத்தான்; மிகைத்தான்;
தருமன் விழித்தான்.

''உன் மனைவியை
ஒட்டு வை; இழந்த
பொருள் அனைத்தும்
அதற்கு ஈடு'' என்றான்.

வீடுமன் தடுத்தான்;
விதுரன் கடுஞ்சொல்
விடுத்தான்; விசயன்
வில்லை எடுத்தான்;
வீமன் கதையை
எடுத்தான்; தம்பியர்
இருவரும் துடித்தனர்.

''பொறு'' என்று
அவர்களை ஆற்றினான்;
நெறி தவறினான்.
பெண்ணைப் பணயம்
வைத்தான்; அறிவுக்
கண்ணை இழந்தான்.

''அன்று பெண்
ஆணுக்கு அடக்கம்;
அடிமை; அவன் உடமை'' என்ற
கருத்து நிலவியது.

''மனைவி என்பவள்
வாழ்க்கைத் துணைவி''
என்று வற்புறுத்திக்
கூறியவர் வள்ளுவர்.

'வாழ்க்கைத் துணை
நலம்' என்பதுதான்
அவர் தந்த தலைப்பு.

யாருக்கு யார் அடிமை?
அது அறிவின் மிடிமை;
மனைவி அவள்
சுதந்திர தேவி;
அவளுக்கு விலங்கு
இட இவனுக்கு
ஏது உரிமை?

அப்படியும், ''அவள்
தருமனின் மனைவியே''

என்பது சட்டப்படி
செல்லாது.
சடங்கின்படி
ஐவருக்கும் உரியவள்;
அவள் குடும்பசொத்து;
இவனுக்கு விற்கவோ
அடிமையாக்கவோ
பராதீனம் செய்யவோ
உரிமை ஏது?

கட்டிய மனைவியை
''ஒட்டு'' என்று கூறி
நாற்சதுரப் பலகையில்
அவன் கட்டி விட்டான்;
தருமம் பேசியவன்
அவனே நெறி தவறினான்,
யானைக்கும் அடி சறுக்கும்;
நீதி தேவனே
நித்திரை கொண்டுவிட்டான்.

சூதில் அவளை
வைத்து இழந்தான்;
வைத்து இழந்தபின்
அவள் யாருக்குச் சொந்தம்?

ஆட்டம் முடிந்தது;
''ஆரணங்கினைக் கொணர்க''
என்று தேரோட்டியை அனுப்பினான்.

''அடிமைகளுக்கு அலங்கரிக்க
மேலாடை ஏன்?''
என்று கொக்கரித்தான்.
உடுத்துக் களையாத
உத்தரியத்தை அவர்கள்
எடுத்துப் போட்டனர்.

அவர்கள் உடலில் ஏறி இருந்த
காழ்ப்புகள் மவுனம் சாதித்தன;
அவை பழைய சரித்திரத்தின்
ஏடுகளாகக் கோடிட்டுக் காட்டின.

தேர் ஓட்டி பிராதிகாமி
நேர் ஓட்டமாக ஓடினான்.
சிந்தித்துப் பார்த்தான்;
சட்ட நுணுக்கங்கள்
அவன் கண்முன் சதிர் ஆடின.

''தருமன் முதலில்
தன்னைத் தோற்றுவிட்டுப் பின்
மின்னை வைத்து விளையாடினானா?
அவளைத் தோற்று விட்டுப்
பிறகு தன்னை அடகு வைத்தானா?''
இந்தச் சிந்தனை அவனைத்
துளைத்தது; அந்த வினாவை
அவள் கேட்டு அனுப்பியதாகத்
திரும்பி வந்து செவியில் ஓதினான்.

''சட்டியில் உள்ளதை
எடுத்துவா என்றால்

அது உடையுமா
உடையாதா என்று
கேட்கின்றாய்!
தருக்க வாதங்கள்
குறுக்குக் கேள்விகள்
இந்தக் கிறுக்கு
உனக்கு ஏன்?
அந்தச் சிறுக்கியை
இங்கு அழைத்துவா!
அவள் கணவன்கள்
விடை தருவார்கள்''
என்று கடிந்து அனுப்பினான்.

''சொத்தைகள் இவர்கள்
நம்மிடம் வித்தைகள்
காட்டுகிறார்கள்'' என்று
கூறித் தம்பியை நோக்கினான்.

''கற்கண்டு போலப்
பேசும் சொற்கண்டு
நீ திகைக்காதே!

குவளை விழியாளைக்
குழிதோண்டி அழிக்க
அவளைக் கொண்டு வந்து நிறுத்து;
பவளவாய் திறந்து
பல்லிளித்தால்
அவளுக்குப் பணிந்துவிடாதே.

எள் என்றால்
எண்ணெய் கொண்டுவரும்
எடுபிடி துச்சாதனன்
காந்தாரியின் இல்லத்தை
நோக்கிக் கடுக நடந்தான்.

''வருக! இங்கே
வடிவுக்கரசி!
நின் கணவர் அங்கே
வாடி இருப்பதை
நேரடி வந்துபார்''
என்று அவளைத் தொட்டு
இழுக்க அருகில் சென்றான்.

மாமியின் இருப்பிலே அவள்
காவலில் இருந்த
காரிகையை அவன்
அழைக்க நின்றான்.

''அத்தை அவள்
ஆதரவு தருவாள்''
என்று கதறி அழுதாள்;
''அடைக்கலம் என்று
உன்னிடம் யான்
உன்னை அடைந்து
உள்ளேன்; படைக்கலனாக
இருந்து நீ தடுக்க
வேண்டும்'' என்று கேட்டாள்.

அவள் மகன் பக்கம்
நின்று பரிந்து பேசினாள்;
''அத்தை மகள் நீ!
அதனால் அன்பு பாராட்டி
உன்னை அழைக்கின்றான்.

அவையில் அழைத்துச்
சென்று மாலை மரியாதை
செய்து பாராட்டுப் பத்திரம்
வாசித்து அளித்துச்
சீராட்டுவார்கள்;
செல்க நீ'' என்றாள்.

''என் அண்ணன்
கல்லில் தடுத்தபோது
சொல்லிச் சிரித்தாயே
அங்கே வல்லில்
தம்மைத் தோற்று
அல்லல் படுகின்றனர்;
அவர்களைப் பார்த்துச் சி

பீடு பெற்றிருந்த
அவர்கள் வாழ்வு
கேடு உற்றது;
அதைக் கண்டு சிரி;
கட்டிய கணவர்கள்
கை கட்டிக் கொண்டு
மட்டிகளாய் நிற்பதைப்பார்

கோல் பிடித்த மணி முடியும்,
கதை எடுத்த தோளும்,
விற்பிடித்த கையும்,
வாள் பிடித்த கரங்களும்
என் அண்ணனுக்கு
வால் பிடிப்பதை
வந்து கண்டு மகிழ்வு கொள்''
என்று கூறி அவளைத்
'தர தர' என்று இழுத்து வந்தான்.

அவையில் அவள்
அலங்கோலமாக
நிறுத்தப்பட்டாள்;

விரித்த கூந்தல்;
தழல் என
எரித்த விழிகளும்,
சீறிய சினமும்,
எரி மலை என
எழுந்த தோற்றம்;
அவையை அதிரச்
செய்தன; அவள்
சொற்கள் வெடிகளை
உதிர்த்து வெளிப்பட்டன.

வீடுமனைப் பார்த்தாள்;
அவன்தான் வயதில் மூத்தவன்;
தாடி வைத்து இருந்தான்;
சாடி அவனை இகழ்ந்தாள்;

''பெண் என்றால் என்ன?
அந்த மென்மையை
அறியாத மரக்கட்டை நீ!
மானம் அவமானம் இவை
உன் ஞானத்துக்கு
எங்கே எட்டப் போகிறது?

கண்டும் காணாமல்
மவுனம் சாதிப்பது ஏன்?''
என்று அந்தத் தொண்டு
முதியவனைக் கேட்டாள்.

அடுத்தது நூல்
கற்ற அறிஞன்;
ஆசான் துரோணன்;
''வில் கற்ற நீ
வீரம் கற்க மறந்தது
ஏன்? ஆசான் என்று
சொல்லிக் கொள்கிற நீ
இந்த நீச வேலையைத்
தடுக்கக் கூடாதா?

ஆசிரியன் நீ
ஆசாரம்; அதை ஏன்
இவர்களுக்குக் கற்றுத்தர
மறந்தாய்?

அவர்கள் உப்பை
உண்டதற்காகவா

நீ சப்பை ஆகி
விட்டாய்; அது அவர்கள்
உன் தொழிலுக்குத்
தந்த ஊதியம்;
நீ வேதியன்;
சாத்திரங்கள் அறிந்தவன்;
அவை பாத்திரங்கள்
நிரப்பிக் கொள்வதற்கு
அல்ல; நேத்திரம்
திறந்து சூத்திரங்களை
எடுத்துக் கூறத்தான்.

விதுரரே நீர்
சொல்லில் விதுரர்;
சுகமான வார்த்தைகளைப்
பேசிச் சுமுகமான
வாழ்க்கை நடத்த
விரும்புகிறீரா?

பெற்றால்தான் அவர்கள்
பிள்ளைகளா!
உன் மூத்தவன்
குருடன்; இருளில்
உழல்பவன்; மருட்சி
அவன் வாழ்க்கை;
அவனால் அவர்களைக்
கண்டித்துத் திருத்த
முடியாமல் போய்விட்டது;

பிள்ளைகளைக் கண்டிப்பது
பெற்றோர் தம் கடமை;
அந்தக் கடமை
உனக்கு உள்ளது;
மடமை சாதிப்பது
ஏன்? உங்களைப்
போன்ற அறிஞர்கள்
வாய் திறக்காமல்
இருப்பதால்தான்
அக்கிரமங்கள் நாட்டில்
ஆக்கிரமிக்கின்றன.

ஏடு எடுத்தது போதும்;
எழுத்தாணி அதனை
எடுத்துவை; கல்வி
கற்ற சான்றோரே!

இந்த நாட்டின்
சீரழிவுகளைச் சிந்தியுங்கள்
அவற்றை எடுத்துக் காட்டுங்கள்
எழுத்தின் கடமை அது.

கவிஞர்கள் என்று சொல்லிக்
கொள்ள யார் இருக்கிறார்கள்?
காவியப் புலவர்
வியாசர்; அங்கே
அவர் காடுகளில்
ஆசிரமங்களில்
ஒதுங்கி வாழ்கின்றனர்.

எல்லாம் முடிந்த பிறகு
கதை எழுத வருவார்கள்;
காவல் துறையினர்
வந்து விசாரிப்பது போல்.

கன்னனைப் பார்த்தாள்;
அவன் தலை கவிழ்ந்து நின்றான்;
துரியன் செய்வதைத்
தடுத்து நிறுத்த திராணி
இல்லை; மவுனம் சாதித்தான்.

அவனை நோக்கி
ஆரணங்கு கொதித்தாள்;
''நீ வீரன் என்று
சொல்லிக் கொள்கிறாய்;
உன் ஆற்றலை
விண் அளாவப்
பேசுகிறாய்; ஆனால்
கொடியவன் ஒருவனுக்கு
விலை போகி விட்டாய்.

நட்பு உயர்ந்ததுதான்
அது தீமைக்கு உடந்தை
ஆவது அன்று; அதைத்
தடுத்து திருத்துவது;
இடித்துச் சொல்லி அவனைக்கீழ்ப்
படிய வைப்பதுதான் நட்பு;

நீ நன்றி உள்ளவன்;
அதுவே ஒருவருக்குச்
சிறப்புத் தராது.

சகவாசம்; அதனால்
ஏற்பட்ட விசுவாசம்;
அதற்குமேல் ஒருபடி
நண்பனை உயர்த்துவது;
அதை நீ செய்யத்
தவறி விட்டாய்;
நீ கொடையாளி
என்று கொட்டம்
அடிக்கிறாய்; பொருள்
கொடுத்தால் மட்டும்தான்
கொடையாகாது;
பிறர் துன்பம்
களைதல் அதுவும்
உயர் கொடையாகும்.

கொடுப்பதே எதற்காக?
பிறர் துன்பம் தீர்ப்பதற்குத்
தானே! மக்கள் வறுமைக்குக்
காரணமாக இருக்கின்ற
சுரண்டல்காரர்கள் தாம்
தம்மை வள்ளல்கள்
என்று மறைத்து வாழ்கிறார்கள்.

நீ புறஞ்சுவர்
கோலம் செய்பவன்;
வீண் பெருமைக்காரன்;
பிறர் மெச்ச வேண்டும்
என்று வாழ்கிறாய்;
உள்ளத்தில் உனக்கு

உயர்ந்த கொள்கை இல்லை;
வெறும் பகட்டுக் காரன்தான்;

நான் இங்கு அடிமைப்
பட்டு இருக்கலாம்;
அதுவல்ல செய்தி;

இங்கு உன் உடன் பிறந்த
தங்கை; சகோதரி
அவள் அவமானப்படுத்தப்
படுகிறாள்; அதை நீ
வேடிக்கை பார்க்கிறாய்.

அதோ அங்கே
கைகட்டி நிற்கிறார்களே!
அவர்கள் உன்
தம்பிமார்கள்!
உடன் பிறவாமல்
இருக்கலாம்; ஆனால்
உடன் வளர்ந்த
வரலாறு உள்ளது.

தருமன் உன் தம்பி;
அவன் மனைவி நான்;
இந்த உறவை நீ
மறந்து வாழலாம்;
அது உனக்குத் தெரியாது;

பழகி விட்டாலே
அவர்கள் உடன்பிறந்தவர்கள்.

உற்ற நண்பர்களுக்கு
உறுகண் நேர்ந்தால்
தடுத்துக் காப்பதுதான்
தறுகண்மையாகும்.

யாராக இருந்தால்
என்ன! மனித நேயம்
அது ஏன் உன்னிடம்
மங்கி விட்டது?

மூத்தவர்கள் இலை
உதிரும் சருகுகள்;
நீ தளிர் விடும்
பச்சை மரம்;
நீ வீரன் என்று
கூறிக் கொள்கிறாய்;
ஈரம் பசை
யற்றுப் போனது ஏன்?

என்றாவது நீ
உன் நண்பன்
துரியன் செயலைக்
கண்டித்திருக்கிறாயா!
ஏன்? பதவி
தந்து விட்டான்;
அது பறிபோகும்
என்று அவன்பாடும்
பல்லவிகளுக்கு நீ
அனுபல்லவிகள்
பாடிக் கொண்டிருக்கிறாய்.

நீங்கள் எல்லாம்
பதவிகளுக்காகத்
தலைமை செய்யும்
உதவிகளுக்காக
அடிமைப்பட்டு
அடங்கி விட்டீர்கள்!
இதுதான் இந்த
நாட்டின் சீர்கேடு.

நான் பாண்டவரின்
மனைவி; அது அல்ல
இங்குக் கேள்வி;
பெண்; அவளை
அவையில் நிறுத்தி
ஆபாசப் படுத்த
நிற்கிறார்கள்.

அழகுப் போட்டிக்கா
என்னை அழைத்து
வந்திருக்கிறார்கள்?

அதுவே கூடாது
என்று கொடி பிடிக்கும் நாடு இது;
மாதர் தம்மை
இழிவு செய்யும்
மடமையைக்
கொளுத்தாமல்
மவுனம் சாதிப்பது

ஏன்? உங்கள்
குருதி குளிர்ந்து
உறைபனி
ஆகிவிட்டது ஏன்?

வீரமற்ற பேடிகளாக
நெட்டை மரங்களாக
நிற்கின்ற நீங்கள்
எல்லாம் ஆண்கள்
என்று சொல்லிக் கொள்ள
அருகதை இல்லை
வெட்கம்; வேதனை.

எங்களுக்கும் காலம்
வரும்; இந்தச் சபையில்
ஒரு பெண் இருந்திருந்தால்
அவள் கண் கலங்கி
இருப்பாள்; கொதித்து
எழுந்து கொக்கரித்து
இருப்பாள்; நீதி
கிடைத்திருக்கும்.

இந்தச் சமுதாயம்
ஆண் ஆதிக்கம் கொண்டது;
உங்களுக்கு நன்மைகளைத்
தேடிக் கொள்ளவே
சட்டங்கள் ஆசாரங்கள்
விதிமுறைகள்;
காலம் வரும்;
எல்லாம் மாறும்.

இன்று ஒரு பெண்
அவளுக்கு நேர்ந்த கதி
இது நெருப்புப் பொறி;
இனிப் பெண்கள்
விழித்துக் கொள்வார்கள்.

சமஉரிமை அதைச்
சாதித்தால்தான் பெண்ணுக்கு
விடுதலை; இனி நாங்கள்
அடுப்பு ஊதும்
அடிமைகள் அல்ல.

பட்டங்கள் ஆள்வதும்
சட்டங்கள் செய்வதும்
பாரினில் நடத்துவோம்.
இது எங்கள் முழக்கம்''
என்று அதிரப் பேசினாள்.

''எட்டும் அறிவினில்
இங்கு ஆணுக்குப்
பெண் இளைப்பில்லை''
என்று முரசதிர அவள்
ஆவேசமாகப் பேசினாள்.

எதிர்த்துப் பேச
அறியாத முரடன்;
மூர்க்கன்; துரியன்
ஆணவம் தூண்டப்பட்டது.

அவளை அவிழ்த்து
அசிங்கப்படுத்துவது
என்று முடிவு செய்தான்;
துச்சாதனனை அழைத்தான்.

''அவளைத் துகில் உரித்துக்
காட்டு; அப்பொழுது
எழும் அழுகுரல் பாட்டு;
இந்த அவையோர்க்கு
எடுத்துக்காட்டு;
அதற்காக அவளை வாட்டு''
என்று ஆணையிட்டான்.

''ஐவருக்கு அவள் ஒருத்தி;
ஏன்? இந்தச் சபையோருக்கும்
அவளை உரிமையாக்கு''
என்று வரம்பு மீறினான்.

அவள் கண்களில்
நெருப்புப் பொறி பறந்தது;
''பொறுப்பற்றவனே
எது உண்மை? எது உயர்வு
என்பது அறியாத மூடன் நீ;

''ஒரு பெண் ஒருவனுக்குத்
தான் என்று கூறுவது
சம்பிரதாயம்;
அது பொது நெறி;
நன்னெறியும் ஆகும்.

அப்படி வாழ்ந்தால்தான்
கற்பு என்று அற்புதமாக
உலகில் எழுதிவிட்டனர்.

பெண்கள் அவர்கள்
ஆண்களின் உடமை
என்று கண்டனர்;
அது அவர்கள் மடமை;

ஆணுக்கு ஒரு நீதி
பெண்ணுக்கு ஒரு நீதி
அது இந்தச்
சமுதாயத்தின் அநீதி.

விதவை ஆகி விடுகிறாள்.
அவள் மறுமணம்
செய்து கொள்கிறாள்;
அது அவள் உரிமை

கட்டியவனைப் பிடிக்க
வில்லை; காதலன் பின்
செல்கிறாள்; அது அவள்
விருப்பம். அதை
யாரும் தடுக்க முடியாது.

வாழ்வு நெறிகள்
பலவிதம்;
இது என் சொந்த
வாழ்க்கை; அதை
அலசிப் பார்க்க

யாருக்கும் உரிமை இல்லை;
விளக்கம் தரவேண்டும்
என்ற கட்டாயம் இல்லை.

நல்லது கெட்டது
என்பது அது
மற்றவர்களை எப்படிப்
பாதிக்கிறது. அதை
ஒட்டித்தான் முடிவு
செய்யப்படும்

சமுதாயச் சுரண்டல்;
அவன்தான் குற்றவாளி;
வலிய ஒரு பெண்ணைக்
கெடுப்பவன்; அவன்
மிருகத்துக்கு நிகர்.''

உரைபல நிகழ்த்தினாள்
அவள் ஆவேசம் அடங்கியது.

துச்சாதனன் நெருங்கினான்
அவள் தந்நிலை இழந்தாள்
செயல் இழந்து உழந்தாள்
இன்று மனிதர்கள்
நம்பிக்கையோடு
வாழ்கிறார்கள் என்றால்
அதற்குத் துணையாக
இருப்பது இறைநம்பிக்கை
அதை அவள் பற்றாகக் கொண்டாள்

பம்பரம் தன்னிச்சையில்
சுழல்கிறது; பின் விசை அடங்கியதும்
அடங்கி நிற்கிறது

தூணைச் சுற்றும்
குழந்தை கீழே
விழுவது இல்லை;
தூண் அதற்குப்
பற்றுக்கோடு.

அவள் பல கதைகளைக்
கேட்டு இருக்கிறாள்;
பாகவதக் கதைகள்.

''ஆதிமூலமே என்று
கதறிய யானையின்
இடரை நாரணன்
களைந்து இருக்கிறான்.

தூணை உதைத்தான்
இரணியன்; அதில்
வெளிப்பட்டு இறைவன்
அவன் ஆணவத்தை
அழித்து ஒழித்தான்.

நாரணன் விளையாட்டுகள்
எல்லாம் அவள் கண்முன்
வந்து நின்றன.

''இறைவா! நீ
என் நிறையைக் காப்பாற்று''
என்று கதறி அழுதாள்
அவள் கண்களில் நீர்
அருவியாகியது;
சினம் சீற்றம் மறந்து
அழுகையில் முடிந்தது.

அவள் வேறு ஓர்
சொல்லும் சொல்ல
இயலவில்லை;

கோவிந்தன் பெயர்
அவளுக்கு வந்தது;
கோவர்த்தன கிரி
எடுத்துப் பசுக்களைக்
காத்தவன் கோவிந்தன்.

நச்சுப் பொய்கையில்
நாகம் மீது
நர்த்தன மாடியவன்
அந்தத் தெய்வம்.
அவளுக்கு நினைவுக்கு
வந்தது. அவள்

இறைவன் திருநாமம்
அதை ஓதியவளாய்ச்
செயல் இழந்தாள்;

இருகரம் கூப்பித்
தொழுதாள்; அவையினர்
பதறிப் போனார்கள்.

மாயையில் மங்கிக்
கிடந்தவர் ஒளிபெற்றனர்;
அவரவர் மனச்சான்று
தட்டி எழுப்பப்பட்டது.

சேலையைக் கைப்பிடித்த
துச்சாதனன் தளர்ந்தான்;
அவன் நெஞ்சை
தெய்வப் பெயர்
சுட்டது; அவனைத் திருத்தியது
தீமைக்கு அது மருந்து ஆகியது.

அவனால் தவறு தொடர்ந்து
செய்ய இயலவில்லை;
தெய்வத்தின்முன்
மனித ஆணை
செயலற்று விட்டது;

சேலையை இழுத்தான்;
ஆனால் அவன்
கைகள் நடுங்கின;
தளர்ந்து சாய்ந்தன;

இந்த இறை உணர்வு
தீயவனைத் திருத்துகிறது
நல்லவர்களைத் தட்டி எழுப்புகிறது.

நலிந்தவர்க்கு நம்பிக்கை
தந்து காத்தது.

இருட்டு அறையில்
மின்சார விளக்கு
பளிச்சிடுவது போல்
அவர்கள் உள்ளொளி
அவர்களைத் தட்டி எழுப்பியது.

துரியன் செயல் இழந்தான்;
அவன் வாயடங்கியது;
மக்கள் தீர்ப்பு
அவனுக்கு மாறாக நின்றது;

சிதைந்து இருந்தவர்கள்
ஒன்று பட்டார்கள்;
அந்த ஒற்றுமையை
நிறுவியது அவள் ஓலக்குரல்;
இறை அச்சம்; நன்மையின் வெற்றி;

தெய்வம் அதற்கு அஞ்சி
அனைவரும் மனம் மாறினர்;
தவறு உணர்ந்து
செயலாற்றினர்.

தெய்வக் கற்பினாள்
அவள் மானம்
தப்பியது; கண்களில்
நீர் நின்றது;

சினந்தாள்;
எரியிட்டுக் கொளுத்த
அழல் அவள்
கண்களில் வெளிப்பட்டது.

இனி தீமை தலையெடுத்து
வாழ முடியாது;
ஒட்டு மொத்தமாக
எதிர்ப்புக் கிளம்பியது.
துரியன் கொட்டம் அடங்கியது.

பாண்டவர்கள் விடுபட்டால்
இவர்கள் தவிடுபொடி
ஆவது உறுதி.

திருதராட்டிரன் தன்
மகன் நல்வாழ்வுக்கு
அஞ்சினான்; அவன்
முன் நின்று பேசினான்

கட்டவிழ்த்து அவர்களை
விடுதலை செய்ய
ஏவினான்

திரௌபதி அவள்
அவர்கள் தரும்
விடுதலையை விரும்பவில்லை.

''பழிக்குப் பழி வாங்குவது
அதுதான் தக்க பாடம்
என்று கருத்துக் கொண்டாள்.

சூதில் அவளுக்கு
நம்பிக்கை இல்லை;
தருமத்தை அவள்
நம்பினாள்; அந்த
தருமத்தைப் பணயம்
வைத்து மறு சூது
ஆடும்படி கணவனைத்
தூண்டினாள்; அவனால்
மீறமுடியவில்லை.

முள்ளை முள்ளால்தான்
களைய முடியும்;
''சூதில் இழந்த உரிமையை
அதே சூதால் பெறுவது''
என்று முடிவு செய்தாள்.

சகுனி நடுங்கினான்;
சூழ்ச்சிகள் பொய்மைகள்
நிலைத்து நிற்பவை அல்ல;
தருமம் வெற்றி கொள்ளும்;
இறுதி வெற்றி அவர்களுக்குத்
தான்; அதற்கு அஞ்சினான்.

வேறுவழி இல்லை;
மறுசூதாட்டம் தொடங்கியது.

உருட்டிய காய்
சகுனியை வெருட்டியது.
வெற்றி பாண்டவர்க்கே
கிட்டியது; விடுதலை பெற்றனர்.

அவிழ்த்து விட்ட சிங்கங்கள்
அவற்றின் சீற்றத்துக்கு
அஞ்சினர்; அவர்கள்
ஆண்மைக்கு நடுங்கினர்,

தருமன் பாண்டவர்தம்
தலைவன்; அறச் செம்மல்;
ஆவேசப்படவில்லை;
நெறி பிறழவில்லை.

மலை குலைந்தாலும்
நிலைகுலையாத மனத்தினன்;
அலை என எழுந்த
தம்பியரின் தருக்கை
அவர்கள் வேகத்தை
அவன் அடக்கவில்லை.

திரௌபதி துரியனை
எதிர்த்து நோக்கினாள்;
அவனைத் துச்சமாக மதித்தாள்
வாய்ப்புக் கிடைத்திருந்தால்
அவன் மீது பாய்ந்து
குருதி கொப்புளிக்க
அவன் மார்பைப் பிளந்து
அவனை வீழ்த்தி இருப்பாள்.

வலிமை மிக்க
வயவேந்தர் தம்
கணவர்; படைகொண்டு
தாக்கி விடைதர முடியும்.

எப்படியும் இழந்த
நாட்டைப் பெற
வேண்டும்; சூதாடித்
தமக்கு விடுதலை
தேடிக் கொண்டனர்.

நாடு, வீடு, சொத்து
அவர்கள் கையகத்து உள்ளது;
அவற்றை மீண்டும் பெறச்
சூதாட வேண்டும்;
அல்லது போரிட்டுத்
திரும்பப் பெறவேண்டும்.

காலம் இடம், வலிமை
மூன்றும் சேர்ந்தால்தான்
போரில் வெற்றி பெறமுடியும்.

இது குழாய்ச் சண்டை
அல்ல; சொற்களைக் கொட்டிச்
சுற்றுப்புறத்தைக் கெடுக்க;
நாலுபேர் வந்து நகைக்க

குடுமிபிடி சண்டை
அல்ல; அந்தக் கெடுபிடிக்கு
அங்கு அவசியம் இல்லை.

அரசர்கள் மோதிக் கொள்ளும்
பெரும்போர்; அதற்கு
அவகாசம் தேவை; வலிமை
உடையவர் சகவாசம் தேவை;

வெளியே சென்றால் தங்க
வீடு, தொழில், வாழ்க்கை
இந்த வினாக்களுக்கு
விடை தெரியவில்லை.

இவர்களை வெளியே
விட்டால் கவுரவர் தம்
எதிர்காலம் அது
கேள்விக்குறியாகி விடும்.

வயப்புலியை
வால் உருவி விட்டால்
அது சீறாது என்பதில்
என்ன உறுதி?

'தீயினால் சுட்டபுண்;
ஆறாதே வாயினால்
சுட்டவடு'
இது வள்ளுவர் மொழி;

துரியனைப் பற்றிய
கவலை தந்தை
திருதராட்டிரனுக்கு வாட்டியது.

எப்படியும் அவர்கள்
நாட்டைத் திருப்பித்
தந்துதான் ஆகவேண்டும்;
அது எப்பொழுது என்பதுதான்
கேள்வி; காலம் தேவை.

ஆண்டுகள் சில கழிந்தால்
வடு ஆற வழியுள்ளது.
சீற்றம் குறையும்.
என்ன செய்யலாம்?

''அவர்களைக் காட்டுக்கு
அனுப்புவது; அங்குச்
சிலகாலம் வாழச் செய்வது;

அதன்பின் அவர்களை
முடக்கி வைப்பது;
அதற்கு ஓர் ஆண்டு''
என ஒரு திட்டம்
உதயம் ஆகியது.

இதன் அடிப்படை
யாது? அந்தக் காலத்தில்
நாடு கடத்தல் என்பது
ஒரு சூழ்ச்சியாக இருந்தது.

இராமனைக் கைகேயி
பதினான்கு வருடம்
நாடு கடத்தி வைத்தாள்.

அதே போல இவர்களுக்கும்
சிக்கல் ஏதாவது ஏற்படுத்தினால்
சிக்கி அழிவார்கள்
என்று கணக்குப் போட்டார்கள்.

பன்னிரண்டு ஆண்டுகள்
அவர்கள் இளமை கழிகிறது;
வலிமை குறைகிறது;
அவர்கள் தனிமனிதர்கள்;
அவர்கள் வலிமை தானாக
ஒடுங்கிவிடும்; உறுதி.

கண்காணாத தேசத்தில்
அவர்கள் எங்காவது ஒழிந்து
வாழட்டும்; அது நன்று
என்று மற்றோர் விதி
வகுத்துக் கூறினான்.

''ஓர் ஆண்டு எங்காவது
மறைந்து இருந்து வாழ்க;
பின் வருக; வந்தால்
'நாடுபெறுக'' என்று
உடன்படிக்கை செய்து
வைத்தான்; நல்லது
செய்வது போல் நடித்தான்.

உடனே அவர்கள் எதிர்த்து மறுத்துக்
குழப்பம் விளைவித்தால்
என்ன செய்வது?

போரைத் தடுக்க
என்ன வழி?
எதையும் தள்ளிப்

போட்டால் தானாக
ஆறிவிடும். இது

அரசுகள் கடைப் பிடிக்கும் வழி;
அந்த நேரத்திற்கு
அவர்களைச் சமாதானப்
படுத்துவது தேவைப்பட்டது.

வீடுமன், விதுரன்
மற்றுமுள்ள பெரியோர்கள்
அந்தக் கருத்தை
ஆமோதித்தனர்.

உறுதி கொண்ட நெஞ்சோடு
பாண்டவர்கள் வெளியேறினர்.
ஆளுக்கு ஓர் சூள்
உரைத்துச் சென்றனர்.

''துரியன் குருதி
கொட்டச் சாவது;
எந்தத் தொடையில்
தன்னை இருத்துவேன்
என்று ஆசை உரை
பேசினானோ அதில்
எழும் குருதி கொண்டு
தன் விரித்த
கூந்தலை முடிப்பது''
என்று சபதம் செய்தாள்.
துருபதன் மகள் திரௌபதி

''துரியனைத் தன் கதையில்
தாக்கி அவன் கதையை
முடிப்பதாக'' வீமன்
சூள் உரை செய்தான்.

கன்னனுக்கும் அருச்சுனனுக்கும்
தீராப்பகை; அவனைத்
தீர்த்து முடிப்பதாகப்
பார்த்தன் சூள் உரைத்தான்.

நகுலன் சகுனியின்
மகனைச் சாத்துவதாக உரைத்தான்;
சகாதேவன் சகுனியை
முடிப்பதாக முடிவுரை கூறினான்.

தருமன் மட்டும்
மனம் சலியாமல் இருந்தான்;
தாழ்விலும் உயர்விலும்
அவன் சமநிலை கடைப்பிடித்தான்.

அவனால் பகை காட்ட
முடியவில்லை; அவன்
தனிப்பட்ட எவரையும்
குறை கூறவில்லை.

''சூழ்நிலைகள் தாம் மனிதர்களைக்
கெடுக்கின்றன; அவை
மாறினால் திருந்துவார்கள்''
என்பது அவன் நம்பிக்கை.

இழந்த நாட்டைப்
பெற்றுத்தான் ஆகவேண்டும்
என்ற பதற்றமும்
அமையவில்லை.

அடுத்தது என்ன செய்ய
வேண்டும்? காடு ஆயினும்
நாடு ஆயினும் அவனுக்குச்
சமமாகவே இருந்தது.

எதிரிகள் மாற்றார்கள்
அல்லர்; உறவினர்கள்;
உடன் வளர்ந்த
சகோதரன்மார்கள்;
தந்தை திருதராட்டிரனை
அவன் பெரிதும் மதித்தான்;
''விழி இல்லாத குறை;
அதுதான் அவன் செயலுக்குக்
காரணம்'' என்று அமைதி கண்டான்.

''கண்ணில் கைபட்டால்
கையை யாரும்
குறைப்பது இல்லை.

அதனால் தம்மைத்தாமே
அழித்துக் கொள்வது கூடாது''
என்பது அவன் எச்சரிக்கையாய் இருந்தது.

## 4. காடுறை வாழ்க்கை

ஏன் இவர்களைக்
காட்டுக்கு அனுப்பினர்?
திரௌபதி துருபதன் மகள்;
அவள் நினைத்தால் தந்தை
சேனைகளை அழைத்து
வந்து படையோடு
வந்து தாக்கலாம்.

மற்றும் கண்ணன்
அவர்கள் சகாயன்;
இவர்கள் நல்ல காலம்;
அவன் துவாரகை
சென்றிருந்தான்; அதனால்
தப்பித்தார்கள்.

அவன் இருந்திருந்தால்
இவர்களைச் சூதாட
விட்டிருக்க மாட்டான்.
தடுத்து நிறுத்தி இருப்பான்.

தக்க துணைவன் தடுக்கப்
பக்கத்தில் இல்லாவிட்டால்
மிக்க அரசர்களும்
தடுக்கி விழுவர்.

பாண்டவர்கள் சொல்லுக்குக்
கட்டுப்பட்டவர்கள்; அவர்களை

நல்லது கூறி நாடு
கடத்தி வைத்தனர்.
விக்கிரமாதித்தன் நாடு
ஆறுமாதம்; காடு
ஆறுமாதம்.
அதனால் அவன் பெற்ற
அனுபவங்கள் மிகுதி;
ஆட்சி சிறப்புறச் செய்தான்

உல்லாச வாழ்க்கையில்
உலகம் அறிய முடியாது.
அதனால் இந்தக் கரடு
முரடான வாழ்க்கை
அவர்களுக்கு நன்மை தந்தது

இந்திய தேசத் தலைவர்கள்
சிறை சென்றவர்கள் பலர்;
தியாகச் செம்மல்கள்.
அவர்கள் மதிக்கப் பெற்றார்கள்;
இந்த நாட்டை உருவாக்கித்
தந்தார்கள்; அவர்கள் புகழ்
அழியாததாக விளங்குகிறது.

இவர்கள் சிறைக்கு
அனுப்பப் படவில்லை;
காட்டுக்கு அனுப்பப்பட்டனர்;
அவர்கள் அனுபவங்கள் பலப்பல.

குந்தி முதியவள்;
அவள் தேவை இல்லை;
அரண்மனை வாசம்
அவளுக்குச் சுகவாசம்;
மற்றும் உற்றார் உறவினர்
சொந்தம் பந்தம்
இவை அவளுக்குத்
தேவைப்பட்டன;

தாயை அவர்கள்
அலைக்கழிக்க விரும்பவில்லை
அவர்களுக்கு உடன்வரத் துணை
திரௌபதி இருந்தாள்;
அதனால் குந்தி
அத்தினாபுரியில் தங்கி விட்டாள்.

அருச்சுனன் தவயாத்திரை

வியாசர் அவர்கள்
பாட்டனார் ஆவர்;
இவர்கள் பிறப்புக்கே
வித்தாக விளங்கிய வித்தகர்;
இவர்கள் நல்வாழ்வில்
அக்கறை கொண்டவர்.

படைகொண்டு தாக்கினால்தான்
தக்க விடைகாண
முடியும்; படைக் கருவிகள்
தேடி வர அவர்களைப்
பயணப் படுத்தினார்

கயிலை மலைக்குச் சென்று
சிவனாரை வேண்டி
பாசுபத அத்திரம்
வாங்கிவர அருச்சுனனை
அனுப்பினார்; அது கடுந்தவம்.

தவம் செய்வார்க்கு
வரம் அளிப்பது
ஈசன் கடமை
என்று கருதப்பட்டது.

வரம் பெற்றவர்கள்
பலர் அசுரர் ஆகிவிட்டனர்;
தேவைக்கு மேல் அதிகாரம்
வன்மை பெற்று விட்டால்
மனித இயல்பு கெட்டு
விடுகிறது; அவர்கள்
அசுரர் ஆயினர்.

வரம் பெற்ற கதைகள்
பல அவன் கேட்டு
அதனால் தானும்
செல்வது என
அருச்சுனன் முடிவு செய்தான்.

காடு என்றால் அங்கே
விலங்குகள் வாழ்ந்ததோடு
அவர்களோடு தவசிகளும்
அங்கங்கே குடிசைகள்

கட்டிக் கொண்டு
குடித்தனம் செய்தனர்.

வியாசர் படைப்புக்
கடவுள்; இந்தப்
பாண்டவர்க்குப் பாட்டன்;
அதனால் அவர்கள்பால்
அவர் அக்கரை கொண்டார்.

எப்படியும் போர்
தவிர்க்க இயலாது;
இழந்த நாட்டை
அவர்கள் பெறுவதுதான்
தர்ம நியாயம்.

அதற்கு ஆயுதம்
தேடுதல் அவசியம்
ஆகியது; படைகளைத்
திரட்டுவது அதற்கு
அவர்கள் ஆயத்தம்
ஆவது அவசியமாகியது.

அந்தக் காலத்தில் ஏன்
அதற்கு முற்பட்ட காலத்திலும்
பதவிகள் வேண்டுபவர்
சிவனின் உதவியை நாடினர்

தவம் செய்யாமல் எதுவும்
யாரும் சாதித்தது இல்லை;

உணவு, உறக்கம் இன்றித்
தாம் கொண்ட கொள்கையில்
அவற்றைத் தேடலில்
நாள் பல கடத்தினர்.

ஞான நெறி என்பது
மற்றவர் சொல்லி வருவது
அன்று; அவர்களே
தம்மைத் தாமே வினவிக்
கொண்டு தான் யார்?
தன் உள்ளம் யாது?
இந்தப் படைப்பின்
தன்மை யாது?
என்று ஆராய்வதே
ஞான நெறி எனக்
கருதப்பட்டது.

இப்படி ஞானம் தேடி
மனத்தை அடக்கி
ஆசைகள் நீங்கித்
தன்னடக்கம் கொண்டால் அது
புலனடக்கம்; அதுவே
அவர்கள் மாபெரும் சாதனை

ஒரு சிலர் சிவனை
வேண்டிப் பேறுகள்
பெற்றனர்; அவற்றிற்கு
வரம் என்று நவின்றனர்.

அர்ச்சுனன் தவம் செய்து
பாசுபத அத்திரம் பெறக்
கயிலை நோக்கிச்
சென்றான் அங்கே கடுங்குளிர்.

அன்ன ஆகாரம் இன்றிக்
காய் கிழங்கு இவற்றைப்
புசித்து உடம்பை வாட்டிக்
கொண்டு கைகளை உயர்த்தி
வைத்துக் கண்மூடிக்
கிடந்தான்; பாவம்
பரிதாபமான நிலை;
அவனுக்குச் சோதனைகள்
தோன்றாமல் இல்லை;
அர மகளிர்
அங்கு நீராட
வந்தனர்; அவன் முன்பு அவர்கள்
மேனகை யாயினர்.

அவன் அவர்களைப்
பொருட்படுத்தவில்லை
இந்திரன் அவர்களை
அனுப்பி வைத்தான்
என்பது கதை.

பார்வதியும் பரமசிவனும்
பக்தன் இவன் படும்
துன்பம் கண்டு
அருள் செய்ய அங்கு

வந்து சேர்ந்தனர்.
குறவனும் குறத்தியாக;
இல்லை; வேடுவனும்
வேட்டுவச்சியாக.

அங்கே ஒரு கடும்
பன்றி அருச்சுனனைக்
குத்த வேகமாக வந்தது.
வேடுவனும் வேடுவியுமாக
வந்த அவர்கள்
அதனைக் கண்டனர்.

அதே சமயம்
அருச்சுனனும் கண்
விழித்துப் பார்த்தான்;
அவன் கைவில் எடுத்தான்;
யார் எய்திய அம்பு
அந்தப் பன்றியைக்
கொன்றது? அது குறித்து
வாதம் எழுந்தது.
இவர்கள் இருவரும்
வாய்ச் சண்டை
முற்றிக் கைச்சண்டைக்கு
மாறி நின்றனர்.

விசயன் வில்வித்தை
அறிந்து வியந்த ஈசன்
அவனுக்குத் திருக்காட்சி நல்கி
கேட்ட பாசுபத அம்பினை
அவனுக்கு தந்து அனுப்பினான்;
இது அதைப் பற்றிய கதை.

**இந்திரன் அழைப்பு**

அத்திரம் பெற்ற
அவன் தனித்திறம்
பாராட்ட இந்திரன்
அவனுக்கு அழைப்பு
விடுத்தான். அங்கே
அவனுக்கு விருந்து
தந்து சிறப்பித்தான்.

அந்த விருந்தில்
ஊர்வசி ஆடினாள்;
அவன் அவள் நாட்டியத்தைக்
கண்டு பாராட்டினான்
அதில் அவள் உச்சி குளிர்ந்தாள்.

பின் நச்சி அவனை
அடைந்து கூடி
மகிழ விரும்பினாள்;
அவன் மறுத்துவிட்டான்.
அவனைப் ''பேடு ஆகுக''
என்று சபித்தாள்;
இந்திரன் இடையிட்டு
''வேண்டும் போது
ஆகுக'' என்று அவள் வாயில்
திருத்தம் பெற்றான்.

**வீமனின் பாதயாத்திரை**

விண்ணினின்று ஒரு
பொற்பூ மண்ணில்

விழுந்தது; அதைக்
கண்டாள் திரௌபதி
ஒரு பூ அவள்
கைக்கு வந்தது
அது அவள் ஆசையைக்
கிளறியது; மேலும்
பூக்கள் சிலவிரும்பினாள்.

வீமன் அது அறிந்தான்;
எங்கிருந்தாலும் கொண்டு
வருவதாக வார்த்தை தந்தான்.

''விண்ணுலகத்தில் கிடைக்கும்
பூ அளகாபுரியிலும் உள்ளது''
என்று கேட்டுத் தெரிந்தான்.

இமயம் நோக்கி அவன்
பயணப்பட்டான்;
வழியில் அனுமன்
அங்கே மூத்து முதிர்ந்து
உயிர் விடாமல்
உலகில் உழன்று கொண்டிருந்தான்;
சீதையின் வாழ்த்தால்
தான் சிரஞ்சீவியாக
வாழ்வதைத் தெரிவித்தான்.

''அனுமனும் வாயுவின் மகன்.
இவனும் அவனுக்கு மகன்''
என்று சொல்லக் கேள்விப்
பட்டு இருக்கிறான்.

இருவரும் கலந்து
உரையாடினர்; வரும்
பாரதப் போருக்கு
அனுமன் அருச்சுனன் கொடியில்
இடம் பெற வேண்டும்
என்று கேட்டுக் கொண்டான்.

அளகை நகர் சென்று
காவல்மிக்க குளத்தில்
தாமரைப் பூ
அது பொற்றாமரை
அவற்றைக் கேட்டுப்
பறித்துக் கொண்டு
குபேரனோடு நல்லுறவு
வைத்துக் கொண்டு
காடு திரும்பினான்.

**சடாசுரன் வதை**

இந்தக் காலத்தில்
பெண் தனியே
போவது ஆபத்து;
சங்கிலி அறுப்பு,
கற்பு அழிப்பு
இந்தச் சங்கதிகள்
அந்தக் காலத்திலும் இருந்தன.

சடாசுரன் என்ற
கொடியவன் ஒருவன்

திரௌபதியைக் கைப்பிடித்து
இழுத்தான்; அங்கே
தம்பியர் நகுலன்
சகாதேவன் கண்டு
தடுத்தனர்; பயனில்லை.

திரும்பி வந்த
வீமன் இதைக் கண்டான்
அவ்வளவுதான்
அவன் சமாதியாயினான்

நல்லது பொல்லது
இப்படிப் பல அனுபவங்கள்
அவர்களை அவ்வப்பொழுது
சந்தித்துக் கொண்டிருந்தன.

**துர்வாசர் வருகை**

ஒரு புதிய சோதனை;
அந்தக் காலத்தில்
முனிவர் வருகை என்றால்
அது மகிழ்வுக்கு உரியது.

ஒரு சிலர் வருகை
பூகம்பத்தை உண்டாக்கியது
தவசிகள் அவர்கள் மனத்தை
அடக்குகிறார்கள்; அவை
வெடிமருந்து போல் சிலசமயம்
வெளிக் கிளம்பும் போது
எரிமலை ஆகி விடுகிறது.

மன அடக்கம்
உகந்தது அன்று;
அதனைப் புலன்கள்
வழி வெளியே
உலவ விடுவது தான்
ஆரோக்கிய வழி.

கல்வி கேள்விகளில்
ஆய்வுகளில், உலக
நன்மைகளில் நற்பணிகளில்
மனம் செலுத்தினால்
இந்த விபத்துக்களைத்
தவிர்க்க முடியும்.

காலம் மாறிவிட்டது
இந்தப் பழைய சித்தாந்தங்கள்
இன்று ஏற்றுக் கொள்ளப்
படுவது இல்லை.

அதன் தீமைக்கு
எடுத்துக் காட்டு
துருவாச முனிவரின்
வாழ்வு நிகழ்ச்சிகள்.

நாழிகை கழிந்து அந்தத்
தவசி அங்கு வந்து சேர்ந்தார்.
சட்டி பானை கழுவித் துருபதி
அவற்றைக் கவிழ்த்து
விட்டாள்; கொஞ்சம்
கண்மூட நினைத்தாள்.

அதற்குள் இந்தத்
துருவாசர் வாசற்படியில்
வந்து நின்றார்.

சோறு எப்படி வடித்துப்
போடுவது? கறிகாய்கள்
எங்கே தேடுவது?
செட்டியார் கடை
அங்கே யாரும்
வைத்திருக்கவில்லை.

நல்ல காலம்
கண்ணன் அங்கு
அந்த நேரத்திற்கு
வந்து சேர்ந்தான்.

அவனிடம் தன்
இயலாமையை அவள்
அறிவித்துக் கைபிசைந்தாள்

கண்ணனைக் கண்டதும்
துர்வாசர்
எல்லை இல்லா மகிழ்ச்சி
கொண்டார்; வாசிஷ்டம்,
வேதாந்தம், இந்த
வியாக்கனங்களில்
அவர்கள் பேசிக்
கொண்டே இருந்தனர்

நேரம் போனதே
தெரியவில்லை
அதற்குள் அவள்
ஒன்றும் பாதியுமாகச்
சமைத்துச் சோறு
வடித்து வைத்தாள்.

பேச்சுகள் முடிந்தன
விவாதங்கள் தீர்ந்தன;
முனிவர் ''தமக்குப்
பசி இல்லை'' என்றார்.

''செவிக்கு உணவு
இல்லாத போதுதான்
சிறிது வயிற்றுக்கும்
ஈயப்படும்''
என்றார் வள்ளுவர்.

அந்தக் குறள் மொழி
இங்கு உண்மையாகியது;
போட்டதைச் சாப்பிட்டு
மகிழ்ச்சியோடு எழுந்தார்.

இது துரியனின் சூழ்ச்சி;
அவன் வடை, பாயசம்,
அறுசுவை உணவு இட்டு
அவரை மகிழ்வித்துப் பின்
அவரைப் பாண்டவர்பால்
அனுப்பி வைத்தான்.

அவர்கள் இடும்
சுவையற்ற உணவு
எரிச்சலைத் தரும்
அவர் சாபமிட்டு
அவர்களை எரிப்பார்
என்று எதிர்பார்த்தான்.

அவன் திட்டம்
தோல்வி அடைந்தது;
அவர்களை அவர்
வாழ்த்தி ஆசி கூறினார்.

செவியிற் சுவை
உணராத மக்களே
வாய்ச்சுவைக்கு
வாடிக் கிடப்பர்
என்ற உண்மை
அங்கு நிலைநாட்டப்பட்டது.

**நச்சுப்பொய்கை**

நச்சுப் பொய்கை
என்று தெரியாமல்
நச்சி அதன் நீரைத்
தருமன் தம்பியர்
நால்வரும் பருகினர்.

அவர்கள் மயக்கம் உற்று
உயிர் இழக்கும் நிலையில்
கீழே கிடந்தனர்;

மருத்துவர் ஒருவர்
அங்கே வந்தார்.
''தன்னால் நால்வரை
எழுப்ப முடியாது
ஒருவர்தான் எழுவர்.

யாரை நீ
குறிப்பிடுகிறாய்?
சுட்டிக்காட்டு''
என்றார் மருத்துவர்.

''சகாதேவன்
அவனை எழுப்பித் தருக''
என்று கேட்டுக் கொண்டான்.

''அருச்சுனன் தானே
மாவீரன்; அவனை
இழந்து நீ எப்படி
போரில் வெல்ல முடியும்''
என்று கேட்டார் அவர்.

எந்த ஒரு தனிமனிதரை
நம்பித் தருமம் வாழ்வது
இல்லை; வெற்றி
தருமத்தை ஒட்டித் தான் அமையும்;

அதை நம்பித்
தான் வாழ்கிறேன்''
என்றான் தருமன்

''இருக்கட்டும்; ஏன்
சகாதேவனைத் தேர்ந்து
எடுத்தாய்; காரணம்?
விளக்கம் கேட்டார்.

''குந்திக்கு மூவர்;
இருவர் இறந்தாலும்
நான் ஒருவன்
இருக்கிறேன்.
பெயர் சொல்ல;

மாத்திரிக்கு இரு
புதல்வர்கள்; அவள்
பெயர் சொல்ல
ஒருவனாவது வாழ
வேண்டும்; அதுதான்
காரணம் என்றான்.

அவர் நால்வரையுமே
எழுப்பித் தந்தார்
அந்த மருத்துவர்
எமன் என்று பழைய
கதை கூறுகிறது.

**தருமனின் உயர்வு**

'நம்மைப் பிடித்த தரித்திரம்
எங்குச் சென்றாலும் விடாது'
என்பது பேச்சு வழக்கு
காசிக்குச் சென்றாலும்

கர்மம் தொலைவதில்லை.
என்றும் கூறுவது உண்டு.

காட்டுக்குச் சென்றாலும்
துரியனின் தொல்லை
தொடர்ந்து வந்தது.
அதற்காக அங்கே
அவன் பாடி வீடு
அமைத்தான்;
பாசறையில்
தங்கி இருந்தான்.

அவன் தீய காலம்
சித்திர சேனன்
என்னும் கந்தருவன்
இவனைக் கண்டு
தேரில் கட்டி
இழுத்துச் சென்றான்.

கன்னனால் அவனை
எதிர்க்க இயலவில்லை
மற்றவர்கள் உயிருக்கு
அஞ்சி ஊர்
போய்ச் சேர்ந்தார்கள்.

துரியன் அழுகுரல்
காட்டில் எதிரொலித்தது;
தருமன் கேட்டான்;
தம்பியரை ஏவி
''அவனைக் காக்க'' என்றான்

வீமனும் அருச்சுனனும்
''தேளைக் கண்ட இடத்து
அடிப்பதுதான் நல்லது;
யாரோ எவனோ
இழுத்துச் செல்கிறான்;
பழி நமக்கு வராது;
அவன் ஒழியட்டும்''
என்று அறிவித்தனர்.

''அவன் தீயவன் தான்
அது நமக்கும் அவனுக்கும்
உள்ள முறிந்த உறவு;

அவன் நம் பழைய உறவினன்;
அவனை மாற்றான் ஒருவன்
வருத்துகிறான் என்றால்
காப்பது நம் கடமை

அது மட்டுமல்ல
அபயம் என்று
குரல் கொடுத்தால்
அவர்களைக் காப்பது
மறவர்தம் கடமை;

போ; முதலில் அவனை
விடுவி'' என்று
அருச்சுனனை அனுப்பினான்.

துரியன் மீட்கப்பட்டான்;
'நன்றி' என்று ஒரு

சொல் கூட
அவன் கூறவில்லை.

அதற்கு மாறாக அவர்கள் மீது
மிகுதியாக வஞ்சம் வைத்தான்
அவர்கள் கைகளால் தான்
விடுபட்டது தனக்கு
அவமானம் எனக் கொண்டான்.

## 5. மறைந்து வாழ்தல்

ஆண்டுகள் பத்தும் இரண்டும்
கழிந்து விட்டன;
ஓர் ஆண்டு எங்கு வேண்டுமானாலும்
வாழலாம்; ஆனால் மறைந்து
வாழவேண்டும் என்பது விதித்த விதி.
விராடன் நகர் அவர்களுக்குத்
தக்கது எனப்பட்டது.

ஊருக்குச் செல்லுமுன்
அவர்தம் படைக்கருவிகளைப்
புறங்காட்டில்
வன்னிமரம் அதன்
பொந்தில் பதுக்கி வைத்தனர்.

தருமன் கங்கன்
என்ற பெயரில்
அவ்வூரில் புகுந்தான்.

அரசனின் ஆசானாக
நெருங்கிய நண்பனாக
அறிவுரை கூறும் அறிஞனாக
ஞானக் கோலத்தில் அங்குச் சேர்ந்தான்.

வீமன் சமையல் வல்லவன்;
நளனுக்கு அடுத்து
இவன் தான் பாகமாகச் சமைத்தான்;
உண்பதற்குத் தக்க இடம்
சமையல் கட்டு;
அதுவே அங்கே தங்கிக்
கொண்டால் தட்டுமுட்டு;

வயிறுமுட்டத் தின்னலாம்
நகுலன் குதிரை
பராமரிப்பில் வல்லவன்
குதிரை பராமரிப்பு
அவன் ஏற்றுக் கொண்ட தொழில்.

சகாதேவன் சாது;
ஆநிரைகளை மேய்க்க
அவன் பொறுப்பேற்றுக் கொண்டான்.
வெளியே சென்று வர அது உதவியது.

திரௌபதி அரசிக்கு
அலங்கரிக்கும் பணிப்பெண்
வண்ணமகள் தொழில் ஏற்றாள்.

அருச்சுனன் அரசமகளுக்குக்
கலைகள் பயிற்றுவித்தான்;

ஊர்வசி தந்த சாபம்
அதை இப்பொழுது அவன்
பயன்படுத்திக் கொண்டான்;
பேடு அந்த வடிவம் ஆனது.

இந்தப் பேடுவடிவம்
விசித்திரமானது;
பெண்ணைத் தொட்டால்
அவர்களுக்கு மின்சாரம்
பாய்வது இல்லை.

அவர்களிடம் எந்தப்
பெண்ணும் அச்சமின்றி
நெருங்கிப் பழகினர்.

வடிவால் ஆண்;
செயல், பேச்சு, சிந்தனை
அனைத்திலும் பெண்;
இரண்டும் கெட்டநிலை.

காகிதப் பூ;
மணம் இருக்காது;
நிறம் மட்டும் இருக்கும்.

பிருகன்நளை என்பது
அவன் தனக்கு
வைத்துக் கொண்ட பெயர்;

ஒருவரை ஒருவர்
அறியாதவர் போல்
அங்குப் பழகிக் கொண்டனர்.

அரண்மனை வாசம்
அவர்களுக்குப் பாதுகாப்புத்
தந்தது; வசதிகளும் அமைந்தன.

மல்லன் ஒருவன்
விராட நகருக்கு
வந்து மற்போர் செய்ய
வீரரை அழைத்தான்;

வீமன் பலாயினன்
என்னும் புனைவுப் பெயரில்
அங்கே சமையல்காரன்''

அவன் முன் வந்து
அந்த மல்லனை
எதிர்த்துப் போர் செய்து
அவனைச் சாய்த்து
மண்ணில் வீழ்த்தினான்.

வீமன் புகழ் ஓங்கியது;
அவனைக் கண்டு அங்கு
உள்ளவர் அஞ்சினர்;
அவனுக்குத் தனிமரியாதை.

**கீசகன் வதம்**

திரௌபதிக்கு அங்கு
வண்ணமகள் வடிவு;
அவள் பெயர் விரதசாரணி;
அங்கே அவள்

தனக்கு ஒரு கதையைப்
பின்னணியாகத் தெரிவித்தாள்.

''கந்தருவன் தன் காதலன்
அவன் அவ்வப்பொழுது
வந்து செல்வான்''
என்று கூட்டி உரைத்தாள்.
இது போன்ற நிகழ்ச்சிகள்
அந்தக் காலத்தில்
சகஜமாக இருந்தன.

கந்தருவர் காரியம்
முடிந்ததும் காரிகையரை
விட்டுச் செல்வது
கதையில் வரும் நிகழ்ச்சி

அவள் தனித்தவள்
என்பதால் அரசியின்
அருமைத் தம்பி
கீசகன் என்பான்
அவளைச் சுற்றி
வட்டமிட்டான்.

அவனிடம் இருந்து
தப்புவது இயலாது;
தமக்கையும் அவனுக்குச்
சலுகை தந்தாள்.

கட்டில் அறைக்கு
அவளைக் கட்டி அணைக்க

அழைத்தான்; துரத்தியும்
பிடித்தான்; வீமன்
பார்த்தான்; பச்சைக்
கட்டையால் விளாசுவது
என்று பதைபதைத்தான்.

அவசரப் பட்டால்
ஆபத்தாக முடியும்;
மறைந்து வாழ்வது
இயலாதது ஆகிவிடும்.

வீமனும் திரௌபதியும்
சேர்ந்து ஒரு திட்டம்
வகுத்துச் செயல்படுத்தினர்.

கீசகன் திரௌபதியால்
பாழ் மண்டபத்துக்கு
அழைக்கப்பட்டான்.

நள்ளிரவு; இருள்
இடையிடையே கல் தூண்கள்.

சேலைகட்டிய மாது
அவள் கீசகனுக்காகக்
காத்து இருந்தாள்;

கீசகன் அவசரப்
பட்டான்; சென்று அவளைத்
தழுவினான்; மீசை
முகத்தில் பொத்தியது;

இரும்புக் கரம்
அவனை இறுக்கியது;
அவன் தறுக்கு அழிந்தது;
சாவின் மடியில்
அவன் தலை சாய்ந்தது.

''பேய் அறைந்தது''
என்று பேசினர் சிலர்;
''காந்தருவன் வண்ண
மகளைத் தேடி வந்தவன்
இவனைச் சுண்ணம்
ஆக்கி விட்டான்'' என்றனர் சிலர்.

கீசகன் மாண்டான்
என்ற செய்தி
அத்தினாபுரிக்கு எட்டியது.

அவர்களுக்கு ஐயம் எழுந்தது;
''வீமனாகத்தான்
இருக்க வேண்டும்''
என்று சர்ச்சை எழுப்பினர்.

அங்கிருந்து அவர்களை
வெளிப்படுத்துவது
என்று திட்டம் போட்டனர்.

''ஆண்டு ஒன்று முடிவதற்குள்
அவர்கள் வெளிப்பட்டு விட்டனர்''
என்று கூறிச் சட்டத்தின்
பிடியில் அகப்படுத்தி

மற்றும் ஒரு பதின்மூன்று
ஆண்டுகள் கடத்துவது
என்று முடிவு செய்தனர்.

''விராட நகரில் தான்
அவர்கள் இருக்கிறார்கள்''
என்பதை ஒற்றரைக்
கொண்டும் அறிந்து கொண்டனர்.

எப்படி அவர்களை
வெளிப்படுத்துவது?
அந்த ஊருக்குச் சென்று
மாடுகளைப் பிடித்து
மடக்கிப் போட்டால்
விராடன் படை
எடுத்து வருவான்;
அவர்களுக்கு உதவியாகப்
பாண்டவர்கள் நிச்சயம்
வெளிப்படுவார்கள்.

மாடுகளை மடக்கிப்
பிடித்தனர்; மேயச்
சென்ற பசுக்கள்
வீடு திரும்பவில்லை;
இடையர்கள் சென்று
அரசனிடம் முறையிட்டனர்.

அரச மகன்
உத்தரன் இளையன்;

அவன்தான் செல்ல வேண்டும்;
அரசன் மூத்து முதிர்ந்தவன்.

''தேர் ஓட்டும் ஆள்
இல்லை; போருக்குப்
போக இயலாது''
என்று சாக்குக் கூறினான்.

''ஆடத் தெரியும்;
கூடம் போதாது''
என்றாளாம் ஒரு நாட்டியக்காரி;

அந்த நிலை அவனது;
சமயம் அறிந்து
பேடி வெளிப்பட்டுத்
''தேர் ஓட்டத் தனக்குத்
தெரியும்; ஏற்க'' என்றான்.

தேரில் அருச்சுனன்
அமர்ந்தான்; உத்தரன்
கடல் போன்ற சேனை
கண்டு உடல் நடுங்கினான்.

தேரைவிட்டு அவன்
ஊரை நோக்கி
ஓடத் தொடங்கினான்
அவனைக் கட்டிப்பிடித்துத்
தேரில் அமர்த்தினான்;
தான் ஒளித்து வைத்த

வில்லும் அம்பும்
மரத்தின் பொந்தில்
இருந்து எடுத்து வந்தான்.

களத்தில் பகைவர்களைச்
சந்தித்தான்; இவன்
அம்பு அவர்களை
அலர வைத்தது.

கன்னன் தக்க
படைக் கருவிகளோடு
களத்திற்கு வரவில்லை.

அருச்சுனன் தன்னை
எதிர்ப்பான் என்று அவன்
எதிர்பார்க்கவில்லை;

துரியன் அருச்சுனன்
முன் நிற்க முடியவில்லை;
அனைவரும் தோற்றுப்
பின் ஓடினர்.

பசுக்களை மீட்டுக்
கொண்டு நகர் சேர்த்தான்.
அரசன் தம் நகரில்
அரண்மனையில் இருந்தவர்கள்
பாண்டவர்கள் என்பது
அறிந்து உயர் பேறு
எனக் கொண்டு மகிழ்ந்தான்;
அவர்களுக்குச் சிறப்புச் செய்தான்.

''அவசரப்பட்டு அவர்கள்
வெளிவந்து விட்டனர்''
என்று சட்டம் பேசினான்
துரியன் அத்தினாபுரியில்;
வீடுமன், ''நாள் முடிந்தது;
அவர்களுக்கு வெளிவர
உரிமை உண்டு'' என்று
கணக்கிட்டுக் காட்டினான்.

கீசகன் வதம்;
அதைச் செய்த
இவர்கள் பாண்டவர்கள்
என்பதை அறிந்து
அரசன் வருந்தினான்

''தவறு இழைத்தவன்
தண்டிக்கப்பட்டான்''
என்று நீதி கூறிக்கொண்டு
ஆறுதல் பெற்றனர்.

உத்தரன் தங்கை
உத்தரை அவளை
அருச்சுனன் மகன்
அபிமன்யுவுக்கு மணம்
செய்து வைத்தனர்.

விராடன் நகரில்
இருப்பது தகாது என்று
அவர்கள் தனித்து ஒதுங்கினர்;

உபப்பிலாவியம் என்னும்
புதிய ஊர் அருகு இருந்தது;
அதனை உறைவிடம் ஆக்கினர்
கண்ணன் அங்கு வந்து
அவர்களோடு கலந்து
உரையாட வந்தான்.

## 6. தூது உரைகள்

அடுத்தது யாது?
விடுத்தது திரும்பப் பெறுவது;

சூதில் இழந்த சொத்து
அதைத் திரும்பப் பெற
வழிகள் இரண்டே இருந்தன;
''ஒன்று சூதுபோர்; மற்றொன்று
மோது மோர்'' என்று பேசினர்.

பலராமன் வழக்குப்
பேசுவதில் பழக்கமானவன்.

''அடிப்பட அவர்கள் ஆண்டு
பன்னிரண்டு ஆண்டனர்;
ஆட்சி அவர்களைச் சார்ந்தது;
திரும்பப் பெற இயலாது''
என்று சட்ட நுணுக்கம் கூறினான்.

சாத்தகி கண்ணனின் தம்பி;
அவன் அதைக் கடிந்து உரைத்தான்;
வெள்ளை நிறத்தவன் பலராமன்;

அவன் அறிவும் வெளிறு
என்றும், படிறு என்றும் உரைத்தான்.

கண்ணன் இடையிட்டான்;
''எதற்கும் தூது அனுப்பிக்
கேட்டு வரல் வேட்கத்
தக்கது'' என்று கருதித்
தன் கருத்து உரைத்தான்.

உலூகன் என்னும்
புரோகிதன் ஒருவன் பொது
இருவருக்கும்; இசைந்தான்;
அவனைத் தூது அனுப்பினர்.

**உலூகன் தூது உரை**

''நாடு கேட்கின்றார்கள்
அதற்கு நயமான உரை
நல்குக'' என்று தெரிவித்தான்.

''விசயனும் வீமனும்
மாவீரர்கள்; அவர்களை
வெல்வது அரிது'' என்று
விளைவினையும் உரைத்தான்.

கன்னன் எழுந்தான்
அதை அவனால் தாங்கிக்
கொள்ள இயலவில்லை.

நாடு கிடக்கட்டும்
'பீடு' அது முதலில்
உறுதியாகட்டும்
வீரர்கள் யார்?
அதனை நிறுவப்

போர் தொடுப்போம்
என்று அவன் தன்
பெருமை தோன்றக் கூறினான்

துரியன் கன்னன்
கூறியதை ஆமோதிதான்;
என்றாலும் வீடுமனும்
கிருபனும் விதுரனும்
''அது கூடாது'' என்றனர்.
''கன்னன் வாய்ச்சொல்
வீரன்; வாய்ப்பு வந்த
போதெல்லாம் தவறவிட்டவன்.
அவன் உரை வீண் உரை''
என்று மாண்புடன் பேசினர்.

''நகம் மழுங்கிய
கிழட்டுப் புலிகள்'' என்று
கன்னன் அவர்களைச் சாடினான்.

**வாசுதேவனை அழைத்தது**

போர் என்பது உறுதி
ஆயிற்று; கண்ணனைத்
தன்பால் அழைப்பது
என்று இருசாராரும்
திட்டம் இட்டனர்

துவாரகையில் கண்ணன்
துயில் கொண்டிருந்தான்;
அவனைத் தட்டி எழுப்பாமல்
தலைமாட்டில் துரியன்
அமர்ந்திருந்தான்;

அடுத்து வந்தவன்
அருச்சுனன்; அவன்
கண்ணனின்
கால் மாட்டில்
அமர்ந்து கொண்டான்.

கண்ணன் ஆடிய
நாடகம் அது;
துயில்பவனைப்
போல் அவன்
பாவனை செய்திருந்தான்.

விழித்து எழுந்து
வீரன் அருச்சுனனைக்
கண்டு பேசிப்
''பாண்டவர் சகாயன்
தான்'' என்பதைத்
தெரிவித்தான்
உறுதி செய்தான்.

அடுத்துத் துரியன்
தான் முதலில் வந்ததாக
முறைமை தெரிவித்தான்.

''முதன்மை அவனுக்கு
வாய்த்தது; வழி?''
என்று அவனை விளித்தான்.

''உம் சேனைகளை
எனக்கு உதவுக''
என்று வினவினான்.
கண்ணன் தர
இசைவு தந்தான்.

''சாதனை தனது''
என்று துரியோதனன்
மகிழ்வுடன் திரும்பினான்;
விசயன் மனநிறைவோடு
நாடு திரும்பி
நன்மை தெரிவித்தான்.

**சஞ்சயன் தூது**

உலூகன் வந்து போனது
திருதராட்டிரன் அறிந்தான்
''போரைத் தவிர்க்க
வழி? அதற்கு ஒரு
தூது அனுப்புவது
தக்கது'' என்று கருதினான்

சஞ்சயன் ஞான முனிவன்
அவன் அறிவுரை
பாண்டவர் கேட்பர்
அந்த நம்பிக்கை
அவனுக்கு இருந்தது.

தத்துவ போதனைகள்
அதில் அவன் வித்தகன்;
பாண்டவரைச் சந்தித்தான்.

மாண்தவம் அதன்
சிறப்பினைத் தெரிவித்தான்;

''அரச வாழ்வு சுமை;
தவமே மேன்மை;

காட்டில் ஞானநெறியில்
பழகிய உமக்கு
வீட்டு நெறியே தக்கது;

துரியன் பால்
இகல் ஒழிக''
என்று அறிவுரை கூறினான்.

தருமன் ஏமாறவில்லை;
சொல் தடுமாறவில்லை.
''பாவம் செய்தவர்கள்
அவர்கள்; அவர்கள்
தவம் செய்வது தக்கது:

சுவர்க்கம் சுகபோக
விரும்பிகளுக்குத் தேவை நரகம்
நன்னெறி வாழ்வோர் நல்தொண்டு
செய்யத் தேடிச் செல்வர்''.

எங்களுக்கு மானம் பெரிது;
கடமை அது முதல்
தவம்; தத்துவம்
அதன் மகத்துவம்
அவை புளித்து விட்டன.

களவேள்வியில் அவர்களைச்
சந்திப்பது தான்
எங்கள் உளம் விரும்புவது
அதனை விளம்புக'' என்றான்.

இறுதியாகக்
கண்ணன் 'இவர்கள்

பூமி ஆள்வர்;
அவர்கள் வான் ஆள்வர்;
அவர்களை வானுலகுக்கு
அனுப்புவது தக்கது''
என்று கருத்து அறிவித்தான்.

**கிருஷ்ணன் தூது**

அடுத்தது போர் முயற்சி,
அதற்குமுன் மற்றும்
ஒரு சிறு முயற்சி.

பாண்டவர்களும்
கண்ணனும் விவாதம்
தொடங்கிப் பேசினர்.

''மூன்று வழிகள் உள்ளன;
ஒன்று தவம் செய்ய
இமயம் செல்வது; அடுத்தது
ஆட்சி கேட்டு அவன்
தந்தால் மீட்டுச்
சென்று அதனை ஏற்பது;
இரண்டும் சாத்தியம்
இல்லை என்றால்
வாத்தியம் முழங்கக்
கொடியை உயர்த்திப்
படை திரட்டுவது'' என்று
கண்ணன் முன் மொழிந்தான்.

''உயிர்ச் சேதம்
மித்திர பேதத்தால்

உண்டாகக் கூடாது;
அமைதிக்கு வழிதேடல்
அதுதான் என் உடம்பாடு''
என்று தருமன்
தன் கருத்து உரைத்தான்

''காடா நாடா
அதுவல்ல கேள்வி
நீங்கள் வீரர்களா?
அடிமை செய்யும் கோழைகளா?

அஞ்சி அடங்கி விட்டீர்கள்
என்றால் நீங்கள்
செம்மறி ஆடுகள்''
என்று சூடு உண்டாக்கிக்
கண்ணன் பேசினான்

''மானம் பெரிது; அதற்காகப்
போர் தொடுத்தல் தேவைதான்;
என்றாலும் உலகம்
அவசரப்பட்டு விட்டீர்கள்
என்று பழிச் சொல் கூறும்.
மறுபடியும் ஒரு முயற்சி
நாடுகேள்; அதை மறுத்தால்
ஐந்து ஊர்; அதுவும் மறுத்தால்
அடுபோர்; அது முடித்துக் கொள்''
என்று முடிவு கூறினான் தருமன்.

அடங்கி இருந்த
தம்பியர் முழங்கி எழுந்தனர்.
வீமன் உரை நிகழ்த்தினான்.

''என் அண்ணன் சாதனைகள்
அடடா! அளக்கவே இயலாது;
அன்று 'இறைவா என்னைக்
காவாய்' என்று பாஞ்சாலி
ஓலமிட்டாள்; வெகுளாதே!
என்று அடக்கி வைத்தான்;

காட்டுக்கு எம்மை
அனுப்பி வைத்த
அந்தக் கண்ணிலான்
மைந்தனை மேல் வீட்டுக்கு
அனுப்பி வைப்பேன்;

நாட்டை நீ ஆள
வழி வகுப்பேன்'' என்றான்.
மேலும் தொடர்ந்தான்.

''என் அண்ணன் சாதித்த சாதனைகள்;
ஆகா இவன் போர் முடித்தான்;
பாஞ்சாலி கூந்தல் முடித்தாள்;
இளையவர் யாம் கூறிய
வஞ்சினம் அவற்றை முடித்து
வாகை சூடவைத்தான்;
இவனைப் போல் இதுவரை
யார் முடித்தார்கள்?''
என்று இகழ்ந்து பேசினான்.

போரில் அவர்களை அழித்துத்
துரியனை இறு கூறு ஆக்கி
வெற்றி சூடுவது வீரம்; அதை

விடுத்து அவனுக்கு அடி
வருடுவது; இதுவா வீரம்?''
என்று வினவிக் கேட்டான்.

தருமன் அவனை
அமைதிப் படுத்தினான்;
''குற்றம் பார்க்கில்
சுற்றம் இல்லை;

மண்ணுக்குப் போர் செய்வது
கண்ணை விற்றுச்
சித்திரம் வாங்குவது ஆகும்;
பிறரும் வாழவேண்டும்;
நாமும் வாழவேண்டும்;
அதுதான் நல்லது''
என்று அறிவுரை கூறினான்.

அவனோடு மேலும் அவன்
வாதிட விரும்பவில்லை

''கண்ணன் பாதம்
சிவக்கத் தூது செல்லத்
தேவை இல்லை; என்னை
அனுப்புக; அவனை முடித்து
வருகிறேன்'' என்றான்

கண்ணன் வீமனை
அமைதிப்படுத்தினான்;
அவனை அடுத்து
அருச்சுனன் தன்
கருத்தை உரைத்தான்.

''மைக்குழலாள்
மன்னர் அவையில்
அரற்றிய நாள்
அன்றும் எங்களை
அடக்கி வைத்தாய்!
இன்றும் எங்களை
முடக்கி வைக்கிறாய்!
என்று நாங்கள் எம்
பகை முடிப்பது?'' என்றான்.

நகுலன் மிகுதியாக
எதுவும் பேசவில்லை.
''போரே தக்கது''
என்று நறுக்கென்று
நாநயத்தோடு உரைத்தான்.

சகாதேவன் சாத்திரம்
அறிந்தவன்; சரித்திரம்
தெரிந்தவன்; நூல்பல
கற்ற அறிஞன்.

கண்ணனை நோக்கிக்
கருத்து உரைத்தான்.
''நீ கருதுவது எதுவோ
அதுதான் நடைபெறும்
என்று உரை தந்தான்.

கண்ணன் அஞ்சினான்;
''அவன் அபாய அறிவிப்பு''
என்பதை அறிந்து கொண்டான்.

அவனைத் தனியே
அழைத்து அதற்கு
விளக்கம் கேட்டான்.

''நீ இந்த உலகத்தில்
தீமையை ஒழிக்கப்
பிறந்திருக்கிறாய்;
ஆக்கம் எது என்பதை
நன்கு அறிந்தவன் நீ;

இந்த உலகம் அழிவு
விளிம்பில் இயங்கிக்
கொண்டிருக்கிறது; அறிவு
ஒளிமங்கிவிட்டது;

ஆன்மீகம் தோற்றுவிட்டது;
அழிவுகள் பெருகிவிட்டன;
ஒரு புதிய உலகம்
அமைக்கப் போகிறாய்;
அழுகிப்போன பழங்கள்;
உலர்ந்து போன காய்கள்;
இவற்றைத் தூக்கி எறிவதுதான்

மாற்றத்துக்கு வழி;
புரட்சி தவிர வேறு
வழியே இல்லை.
போர்கள் தவிர்க்க இயலாது;

முட்டி மோதிக் கொண்டு
சாகத்தான் போகிறார்கள்
அதற்கு நீ காரணன்

ஆகப் போகிறாய்;
முடிவு செய்து விட்டாய்''
என்று தன் கருத்தை
வெளியிட்டு விளக்கினான்.

கண்ணன் அதிர்ந்து போனான்.
''போர்தான் முடிவு'' என்பது
தான் கருதியது தவறோ
என்று தன்னைத் தானே
கேட்டுக் கொண்டான்.

''தவிர்க்க வழி உளதோ''
என்று கேட்டு அறிய
அவனிடம் விரும்பினான்;

''போர் தவிர்க்க
முடியும்; தலைமை
அதனை மாற்ற வேண்டும்;
இது உலகப் பொதுநியதி.

இங்கே தக்க தீர்ப்பு
ஒன்று உள்ளது
கன்னன் யார்?
அது உனக்குத் தெரியும்.

அவனை மன்னன்
ஆக்குவது முதற்செய்கை;

அவனைக் கொல்வது என்று
வீர வசனம் பேசி
வரும் விசயன்

அவனைக் கொன்று விடுவது
அடுத்த செய்கை.

மூன்றாவது திரௌபதி
விரித்த கூந்தலை
முடிக்க வேண்டும்;
இது மிக எளிது.

கூந்தல் இருந்தால்தானே
முடிப்பு என்பது தேவையாகிறது;
அதைக் களைந்து விட்டால்
சூள் உரை அது இல்லை;
அழிவது தவிர்க்கலாம்'' என்றான்.

மற்றொன்று நீ
சூத்திர தாரி
அழிவுக்கு நீ தயங்குவது
இல்லை; ஆக்கல், படைத்தல்
அழித்தல் இவை எல்லாம்
உன்னைப் பொறுத்தவரை
சமமான வை;
ஏன் விளையாட்டு
என்றும் கூறிவிடலாம்;
உன்னைக் கட்டிப் போட்டால்
எல்லாம் தீர்ந்து விடும்''
என்று முடிவுரை கூறினான்.

''என்னைக் கட்டு மாறு எங்ஙனம்?''
என்று ஒரு கேள்வியை எழுப்பினான்.

''அன்பினால் இறைவன் கட்டுப்
படுவான்; நீ எங்கள்
அன்புக்கு அடங்கியவன்;
கட்டுப்படுத்த முடியும்''
என்று வழி கூறினான்.
அவன் நாலும் தெரிந்தவன்.

ஞானம் உடையவன்.
''இருவரும் பேசியது
வெளியில் கூற வேண்டாம்''
என்று கண்ணன் கேட்டுக்
கொண்டான்; அவன் அறிஞன்.
''பாரதப் போரில் எங்களுக்கு
நீ காப்பாக இருக்க வேண்டும்;
இது நான் வேண்டுவது''
என்று வேண்டுதல் தெரிவித்தான்

அவன் நட்புக்கு இசைவு
தந்தான்; இறுதி வரை
அவர்களுக்கு உதவுவதாக
வாக்கு அளித்தான்.

அடுத்தது ஆர் அணங்கு
திரௌபதியின் கருத்தைக்
கிளரக் கண்ணன் நினைத்தான்

''தருமன் கூறும் உரையே
தக்கது; அமைதியே
ஆக்கம் தரும்'' என்று
தான் கருதுவதாக அறிவித்தான்.

சீறி எழுந்தாள்; சினந்தாள்;
''கற்றைக் குழல் பிடித்துக்
கண்ணிலான் பெற்றெடுத்த
பார்வேந்தன் பற்றித்
துகில் உரியப்
பார்த்திபர் பார்த்திருந்தனர்

அன்று என் மானம்
யார் காத்தது?
அன்று தெய்வம்தான்
அவர்களைத் தடுத்து நிறுத்தியது.

இன்று இந்தத் திறல்வீரர்
ஊர் ஐந்து பெற்றுவிட்டால்
அன்று விரித்த கூந்தல்
முடிப்பது யார்? அழிந்து
என் வாழ்வு முடிவது;
அதுதான் இறுதி வழி'' என்றாள்.

இறுதியில் கண்ணனின்
இளவல் சாத்தகி
உரை செய்தான்.

''தண்டு இருந்தது இவன்
கரத்தில்; தனுசு இருந்தது
அவன் கரத்தில்;
வண்டு இருந்த பூங்குழல்மேல்
மாசு இருந்தது என
அவள் இருந்தாள்;
கண்டு இருந்தீர் அனைவரும்;
பண்டு இருந்த பகைவர் பால்
ஊர் கேட்டு உண்டு
இருந்து வாழ நினைப்பீர்;
இது தாழ்வு உமக்கு' என்றான்.

அதற்குமேல் வாதங்கள்
நிகழாவண்ணம் கண்ணன்
முடித்துக் கொண்டான்.
வீர மகன் அபிமன்யு
அவனைச் சுட்டிக் காட்டிச்
''சோர்வு கொள்ளத் தேவை இல்லை''
என்று திரௌபதிக்கு ஆறுதல்
கூறிக் கண்ணன் வெளியேறினான்.

**தூது செல்லுதல்**

கண்ணன் அத்தினாபுரி அடைந்தான்;
துரியன் அவனுக்கு
வரவேற்பு அளிக்க மறுத்தான்;
கண்டும் காணாததுபோல்
அவனைப் புறக்கணித்தான்.

கண்ணன் விதுரன் வீட்டில்
சென்று தங்கினான்; அவன்
மனங்குளிர்ந்து வரவேற்றான்.

''அவன் வந்து தங்கியது
தான் செய்த மாதவம்''
என்று முகமன் கூறினான்.

மறுநாள் காலை
துரியன் அவைக்குக்
கண்ணன் தனியே சென்றான்.

உரிய நாடு கொடு
அது மறுத்தால்
''ஐந்து ஊர் கொடு;
இல்லை என்றால் அடுபோர்''
என்று தெளிவாகக் கூறினான்.

''ஐந்து வீடும் அவர்களுக்கு
இங்கு இல்லை; போர்
அதுதான் முடிவு'' என்று
கைபோட்டுக் கொடுத்தான்.

கண்ணன் சென்றதும்
துரியன் விதுரனைக்
கடிந்து கொண்டான்.

''பகைப் புலத்தில்
இருந்த வந்த

இடையன் மகன்
அவனுக்கு இடம்
தந்தது ஏன்?''
என்று சாடினான்.

பேச்சு முற்றியது;
விதுரன் தன் கைவில்லை
முறித்துப் போட்டான்

''நீ எக்கேடு கெட்டால்
எனக்கு என்ன?
போருக்கு நான்
துணையாகேன்''
என்று உறவு முறித்துக் கொண்டான்.

அடுத்தது கண்ணன்
துரோணன் மகன்
அசுவத்தாமனைச் சந்தித்தான்.
அவன் பார்க்கும்படித்
தன் கைமோதிரத்தைத்
தரையில் நெகிழ்த்தான்.

அதை அவன் எடுத்துக்
கொடுத்தான்; பின்
வானைச் சுட்டிக் காட்டிச்
''சூரியனை ஊர்கோள்
சுற்றுகிறது'' என்று காட்டினான்.

அவன் வானைப் பார்த்தான்;
அவனிடம் கண்ணன்
விடை பெற்றான்

எட்டியிருந்து இவர்களை
ஒட்டிக் கவனித்த
துரியன், ''அவனுக்கு இவன்
ஏதோ சத்தியம் செய்து
தந்தான்'' என்று கருதினான்.

அவனை அழைத்துப்
பகைத்துக் கொண்டான்.

''படைத் தலைமை
அவனுக்கு இல்லை''
என்று நீக்கி விட்டான்.
கண்ணன் சூழ்ச்சிவென்றது.

அடுத்தது குந்தியின் வீடு
அவளைச் சந்தித்துக்
''கன்னன் அவள் மகன்''
என்பதை அறிவித்தான்.
அதிர்ச்சியுற்றாள், அவள்
இருதலைக் கொள்ளி
எறும்புபோல் தவித்தாள்.

''கன்னனைச் சந்தித்து
அவனிடம் உண்மை கூறி
இரண்டு வரம் கேள்''
என்று சொல்லி அனுப்பினான்

''அவன் கையில் அசுவசேனன்
என்ற நாகம் அத்திரமாக
உள்ளது; அதை அருச்சுனன்
மீது இரண்டாவது முறை
ஏவக்கூடாது; இது முதல் வரம்,

அடுத்தது தம்பியர் தலைகளை
அவன் கொய்தல் கூடாது;
அவர்களைப் போரில்
கொல்லுதல் கூடாது; இந்த
இரண்டையும் கேள்''
என்று சொல்லி அனுப்பினான்.

அதில் அவள் வெற்றியும்
பெற்றுச் சாதித்து முடித்தாள்.

அடுத்தது இந்திரனை
அழைப்பித்தான்.
அருச்சுனன் இந்திரன் மகன்
அதனால் அவன் பாசத்தைத்
தூண்டிச் செயல்படுத்தினான்.

இந்திரன் கண்ணனிடம்
ஒரு அந்தணனாகச் சென்றான்.
அவன் கவச குண்டலங்களை
யாசித்துப் பெற்றான்;
பின் கண்ணன் நாடு திரும்பினான்.

## 7. போர் நிகழ்ச்சிகள்

இரு திறத்துப் படைகள்
பொருகளத்தில் நின்றனர்.
அணிவகுத்த படைகளுக்குத்
தளபதிகள் தனித்தனி ஆயினர்.

துரியன் அவனுக்குத் துணைவர்
மிகுதி; தலைமைக்குத் தகுதி
அவர்களுக்குள் உட்போர் மிகுதி.

யார் தலைமை தாங்குவது?
இதுவே அவர்கள் கேள்விகள்;
ஒருவர் தலைமையில் மற்ற
எவரும் பணிசெய்ய மறுத்தனர்.

போர் என்பது கூட்டுச் செயல்;
ஒட்டு மொத்தமாக நின்று
தாக்கி இருந்தால் வெற்றி
இவர்கள் பக்கம் அமைந்து இருக்கும்.
வெற்றியை விட அவரவர்
பதவிகளுக்குப் போட்டி இட்டனர்.
இதுவே அவர்களுக்குச் சரிவு தந்தது.

எதிர் அணியில் இருந்த
முதியவர்கள்; அவர்களை அருச்சுனன்
தன் தேரில் இருந்து பார்த்தான்;
அருகில் கண்ணன் தேர்ச்சாரதி.

குடிக்குத் தலைவன் வீடுமன்;
கல்வி கற்றுத் தந்த ஆசான்கள்
கிருபன்; துரோணன்;
அவர்கள் மகன் அசுவத்தாமன்;

எங்குப் பார்த்தாலும் உறவு;
பொங்கும் உயர் அன்பின்
சுற்றத்தினர்; பழகியவர்கள்.
இவர்களா பகைவர்கள்?

பொருகளம் என்று கூறுகின்றனர்;
இது பலிகளமாக மாறுவது உறுதி;
குருதி ஆறு பெருக்கெடுக்க,
அவர்கள் கைகால்கள் துடிதுடிக்கச்
சாவை நோக்கிப் பயணம்;

இதுவா வெற்றி; இவர்களைக்
கொன்றுதான் ஆக வேண்டுமா?
கட்டிடங்கள் இடித்துத் தள்ளலாம்;
புதிதாக அடுக்கிக் கட்டலாம்;

இறந்தவர்கள் அவர்கள் உயிர்
பெற்று எழமுடியுமா?
இந்த ஆண்கள் படுகளத்தில்
பட்டால் குங்குமம் இட்டுக்
கோயில்கள் செல்ல எந்த
மங்கையர் உயிர் வாழ்வர்?

வெள்ளைப் புடவைக்கு
எங்கே போவது?
இந்த வீரர்களை நம்பி
எத்தனை குடும்பங்கள்
வாழ்ந்து கொண்டு இருக்கின்றன;
இவர்களா தனக்குப் பகைவர்கள்?''

எண்ணிப் பார்த்தான்.
அருச்சுனன் செயலற்றான்.
காண்டீபம் கைவிட்டு
நெகிழ்ச்சி அடைந்தது.

தளர்ந்து செயலிழந்த
தனஞ்சயனுக்குத் தெளிவு
தேவைப்பட்டது;
படுகளத்தில் ஒப்பாரி
வைத்து என்ன பயன்?
போர் என்பது
நன்மைக்கும் தீமைக்கும்
நடக்கும் போராட்டம்.

தனிமனிதன் வெறிச்செயலுக்கும்
மானுடத்தின் நெறிமுறைக்கும்
நடத்தும் தேர்வுக்களம்.

இரும்புப் பட்டரைக்கு
வந்து கரும்பு கடித்துக்
கொண்டு கைமுடக்குவது
அறிவற்ற செயல்;

சம்மட்டி எடுத்துச்
சாத்தி நிமிர்த்துவது
கொல்லனின் தொழில்;
களம், போர்க்களம்.

''சிவப்புப் பெறுகிறது''
என்று சிந்தை செய்து
கொண்டு இருக்க முடியாது.

கண்ணன் அருச்சுனனுக்கு
அறிவுரை கூறினான்;
அது இனிய கீதம்;
கீதை நன்மொழி
அந்தக் களத்தில் உதயமானது.

''கடமை அதுதான் செய்யத்
தக்கது; கர்த்தா தனிமனிதன்
என்று கருதுவது மடமை;

இந்த உலக இயக்கம்
ஆரைச் சக்கரத்தின்
சுழற்சி; அதில் நீ
ஓரத்தில் அமர்ந்திருக்கும்
சிறு துரும்பு.

துரும்பு அந்த ஓட்டத்தில்
அகப்பட்டுச் சுற்றுகிறது;
தான் தான் சக்கரத்தைச்
சுற்றுவது என்று எண்ணுவது
அடிப்படையில் அறியாமை.

மாபெரும் பிரபஞ்சத்தில்
நீ ஒரு பனித்துளி;
தோன்றும் போதே
மறைந்து விடுவது
மனித வாழ்வு;
அழிவு அதன் முடிவு.

''இந்த உலகத்தை இயக்கும்
இறைப் பொருள்
காண்கின்ற பொருள்
எல்லாம் கடவுள்'' என்று
கொண்டால்; கண்டால்
பூரண ஞானம்
ஒருவரிடம் தானாக அமையும்.

மனம் என்பது மாயை;
அது சூழ்நிலைகளில்
சிக்குண்டு சீரழிகிறது.
விருப்பு வெறுப்பு
இவை மனிதன்
படைத்துக் கொள்பவை;
இந்த உலகத்தில் அவை
இயல்பாக அமைவது இல்லை.

மனம் பேதலிக்கும்;
அது வழி காட்டி அல்ல;
அறிவு அதுதான் ஒளி.

களத்துக்கு வரும் முன்பு
அவர்கள் உற்றார் உறவினர்
இங்குப் பாடம் படிக்க
வந்தபின் மாணவர்கள்;
அவர்களுள் பேதம்
பார்ப்பது அறியாமை,

இடமாற்றம்
ஆள்மாற்றம் தருகிறது;
வீட்டில் ஒருவன் தலைவன்;
வெளியே அவன் பணியாள்;
இடத்துக்கு இடம்
ஆள் மாறுகிறான்.

இங்கு எதிர் நிற்பவர்
யார் எவன் என்று
காணத் தேவை இல்லை;
அனைவரும் இப்பொழுது
உன் பகைவர்.
பயிருக்கு நடுவே
வளர்ந்த களைகள்;
முள் புதர்கள்;
அவர்களைக் களைந்து
எதிர்த்து வெற்றி பெறுவது
உன் கடமை.

பற்றுகள் பாசங்கள்
அவை வெறும் தளைகள்;

அவற்றைத் தூக்கி
எறிவது வீரனின் கடமை.

கடமையைச் செய்;
பலனைச் சிந்திக்காதே;
அதுதான் மனிதத்தன்மை.

முடிவு அது உன்
கையில் இல்லை;
தொடக்கம் தான்
உன்னிடம் உள்ளது.

முடிவு அது தேவைதான்;
அது நம்மைக் கடந்த
ஒன்று; செயல் உன்
கையகத்து உள்ளது.

நேர்மை என்பது
அடிப்படை; நேர்வழிதான்
தேர்ந்தெடுக்கத் தக்கது.
கடமையைச் செய்
முடிவு இறைவனிடம்
விட்டு விடு; இறை
அதில் நம்பிக்கை
இல்லையா? இந்தப்
பிரபஞ்சத்தை இயக்கும்
ஆற்றல் விதிகள்
அவற்றிற்கு விட்டுவிடு.

உனக்கு என்று ஒரு கடமைய நீ
தேர்ந்து எடுத்துக்
கொள்கிறாய்; பின்பு
அதை நெகிழவிடக்
கூடாது; தப்பி ஓட
நினைப்பது தவறு.

தப்பித்துச் செல்லுதல்
பொறுப்பை விடுதல்
அது இறை நெறி அன்று.

போராடு; வெற்றி
காணச் செயல்படு;
விளைவு அது
அதுவே தேடிக் கொள்ளும்.

நேற்று அவன் ஆசான்;
இன்று அவன் பகைவன்
நேற்று அவன் பாட்டன்;
இன்று அவன் எதிரி.
உயிர் அழிவுகள்
அதற்கு அஞ்சுபவன்
கோழை; அறிவு
அற்ற ஏழை;

நீ வீரன்;
உன் நரம்புகள்
உறுதி பெற்றவை;

செயல்படு;
எடு வில்'' என்றான்.

இந்த அறிவுரைகள்
அவன் மனநோய்க்கு
மருந்து ஆயின.

சோர்வுகள் நீங்கின;
அச்சம் தவிர்ந்தான்.
இறப்பு அவனை அச்சுறுத்தவில்லை.
இரக்கம், கருணை
அவை மறைந்து நீங்கின.

அழுகிப் போன
பழங்கள்; அவை
கூடைகளில்
அடுக்கி வைக்கப்
பட்டிருந்தன.
அவற்றைத் தூக்கி
எறிய முற்பட்டான்.

இந்த முதியவர்கள்
என்ன செய்து கொண்டிருந்தார்கள்?
அநீதிக்குத் துணை நின்றார்கள்.

எதிர்க்க அஞ்சியவர்கள்;
அறத்தைக் கைவிட்டவர்கள்;
வெறும் பூசணிக்காய்கள்;
போட்டு உடைக்க
வேண்டியது தான்.

தீயவன் தவறு செய்தான்;
அவனைத் துணிந்து
தடுக்க மறந்தவர்கள்''

இந்தச் சிந்தனைகள்
அவனுக்குத் துணிவு தந்தன;
அவர்களைக் கொல்லுவதற்கு
வில்லும் அம்பும்
கைகளில் எடுத்தான்
களம் களை கட்டியது.

யார் யார் எப்படிச்
சென்றார்கள்? எப்படிக்
கொன்றார்கள்? ஒரு
பரணியே பாடமுடியும்.

பதினெட்டு நாட்கள்
தொடர்ந்து போர் நடத்தத்
தினம் ஒரு தலைவன்.
வீரம் மட்டும் அங்கு
விளையாடவில்லை;
சூழ்ச்சிகள் தலைஎடுத்தன.

வீடுமனை வெல்வது
எளிதாகப் படவில்லை;
சிகண்டி என்பவள்
அவனைக் கொல்வது என்று
சூள் உரைத்து இருந்தாள்.

காசி நகரத்து அரசன்;
அவனுக்கு மூன்று பெண்கள்;
மூத்தவள் அம்பை;
அவள் வீடுமனை விரும்பினாள்
மணம் செய்துகொள்ள வேண்டினாள்.
அவன் மறுத்து விட்டான்.

அவள் வீர சபதம்
எடுத்தாள்; ஈரமின்றி
அவனைக் கொல்வது என்று
உறுதி கொண்டு நின்றாள்;
சிகண்டி என்று
தன் பெயர் மாற்றிக் கொண்டாள்.

விசயனின் தேரில்
ஏறி இருக்க இடம் பெற்றாள்;
அங்கிருந்து அவள்
தொடர்ந்து அம்புகள்
வீடுமனை நோக்கி
மழையெனப் பொழிந்தாள்.
அவை ஒருபெண்
ஏவியவை என்பதை
அறிந்தான் வீடுமன்;
பெண்ணைக் கொல்வது
வீரமன்று;
எதிர் தாக்குதல்
இழிவு எனக் கருதினான்.

அந்த அம்புகள்
அவன் மார்பில் தைத்தன;
முட்கள் போல்
அவை நிரைத்தன;
அவன் மரணப் படுக்கையில்
பல நாள் கிடந்து
இறுதியில் உயிர் விட்டான்.

அடுத்தது துரோணன்
அவனைக் கொல்வதும்
இயலாதது ஆகியது.

அவன் பாசமகன்
அசுவத்தாமன்
''அவன் இறந்து விட்டான்''
என்று ஒருபொய்
தருமனைக் கொண்டு
சொல்லுவித்தான் கண்ணன்.

வாய்மை குன்றாத
தருமன்; அவனே
நேர்மை குன்றினான்.
''அசுவத்தாமன் என்னும்
யானை இறந்தது'' என்று
மெய் நிகழ்ச்சி
ஒன்றைக் கூறினான்.

கண்ணன் ஊதிய
சங்கு ஒலி இந்தச் சொல்லை
அழித்து விட்டது.

அவன் தன் மகன்
அசுவத்தாமன்தான்
இறந்துவிட்டான்
என்று சோர்ந்து
வில்லைத் தரையில்
போட்டுச் செயலற்றான்.

அந்த நேரத்தில்
திட்டத்துய்மன் அவனைத்
தீர்த்து முடித்தான்.
துருபதன் வஞ்சினம் நிறைவேறியது.

அபிமன்யு வீரன்;
அவனை எதிர்த்துப்
போரிடக் கவுரவர்
அஞ்சினர்; பின் வாங்கினர்.

அவனை வியூகம்
அமைத்து வீமனிடம்
இருந்து பிரித்தனர்.
தனியே அவன் அகப்பட்டுக்
கொள்ளக் கிருபன்
கன்னன், சயத்ரதன்
இவர்கள் கூடி அவனை
அழித்து ஒழித்தனர்.

கன்னன் இறுதியில்
களம் வந்தான்;

ஒருமுறை ஏவிய
அம்பு அது தப்பியது;
அதுநாக அத்திரம்;

மறுமுறை ஏவும்படி
அது மன்றாடியது;
அவன் தேர் ஓட்டி
சல்லியனும்
அதே கருத்தைக்
கூறிப் பார்த்தான்.

கன்னன், ''அது
வீரத்துக்கு இழுக்கு''
என்று மறுத்துவிட்டான்.

சல்லியன் அவனிடம்
முரண் கொண்டு
தேரினின்று விலகிவிட்டான்

தேர்ச் சக்கரம்
ஒன்று தரையில் ஆழ்ந்தது.
அதைத் தாங்கிப் பிடித்துத்
திணறி நின்றான்.

தருமம் அவன் உயிரைக்
காத்து நின்றது; அதையும்
கண்ணன் தூண்டுதலில்
இந்திரன் வந்து இரந்து
அதனைப் பெற்றுக் கொண்டான்.

அருச்சுனன் அம்புக்கு
அவன் இரையானான்
அசுவத்தாமனைக் கண்ணன்
ஏற்கனவே பிரித்து விட்டான்;
விதுரன் வில்லை இறுத்து
முறித்து விட்டான்.

படைத் தளபதிகள்
கருவம் மிக்கவர்கள்
வீரம் பேசுவதில்
விவேகம் இழந்தனர்.

எஞ்சி நின்றவன் துரியன்;
அவன் மட்டும் அஞ்சவே இல்லை.
அழிவு அவனுக்கு விழிப்பு
ஏற்படுத்தவே இல்லை;
வளையாத நெஞ்சு.

போர்க்களத்தில் தன்
படைகளைப் பலிகொடுத்தான்;
உடன் பிறந்தவர்களை
ஒழித்து முடித்தான்;
சகுனி சாம்பல் ஆயினான்;

இறுதியில் அவன்
பித்தம் பிடித்தவன் ஆயினான்;
களத்தை விட்டு நீங்கி
ஒரு குளத்தை அடைந்தான்

அதில் முழுகி அங்கிருந்து
தெய்வ மந்திரங்களை
முணுமுணுத்துக் கொண்டிருந்தான்;
அவனுக்கு ஒரு நம்பிக்கை
''அழியாத வாழ்வு கிடைக்கும்.
இறந்தவர்களை எழுப்ப முடியும் ''
என்று மந்திரம் ஜெபித்துக்
கொண்டிருந்தான்.

துரியன் இருக்கும் இடம்
தேடித் தேடி அலைந்தனர்;
அவன் தலை மட்டும்
அவர்களுக்குத் தெரிந்தது.

கரையில் நின்று அவனைக்
கூவி அழைத்தனர்;
அவன் வாவிவிட்டு
வெளியே வரவில்லை;
வீமன் குரல் கொடுத்துக்
கூவி அழைத்தான்.
''நீ கவுரவர் குலத்துக்கே
இழுக்குத் தேடுகிறாய்;
உயிர் வேண்டுமென்றால்
இரந்து கேள்;
மறைந்து வாழதே
உனக்கு ஒரு வாய்ப்பு
தனி ஒருவனாக நீ
என்னுடன் போர் செய்க.

என்னை நீ வென்றால்
அதுபோதும்; வென்ற
நாடு முழுவதும் உனக்கே
தருவோம்; உனக்கு
அடிமையாவோம்''
என்று ஆசை காட்டினான்;

துரியன் உயிரைவிட
அடையும் நன்மைக்கு
மதிப்புத் தந்தான்;
''வீமன் சமவலியன்;
தனித்துப்போரிடுகிறான்;
வெல்ல முடியும்''
என்று நம்பிக்கை கொண்டான்

கரை ஏறிய அவனுக்குக்
களம் குறித்தனர்.

மற்போர் தொடங்கியது;
அதற்கு முடிவு ஏற்படவில்லை.
கதைப் படை கொண்டு
தாக்கிக் கொண்டனர்.
வெற்றி தோல்வி எதுவும்
முடிவு ஆகவே இல்லை.

இருவரும் வாய்விட்டுப்
பேசினர் ''உன் உயிர்நாடி
உள்ள இடம் எது?''
என்று துரியன் கேட்டான்.

'நெற்றி என்றான் வீமன்
அடி நெற்றியில் பட
அவன் ஏற்று விழுந்தான்.
மறுபடியும் அடித்துக்
கொண்டனர்;

''உன் உயிர் நாடி
எங்கே?'' என்று வீமன்
கேட்டான்; அதற்கு
''நெற்றியே'' என்று அவன்
வெற்றுரை தந்தான்,

அடித்துப் பயன் இல்லை;
அவன் துடித்து விழவில்லை;
கண்ணனுக்கு உண்மை
தெரியும்; விசயன் கேட்டுத்
தெளிந்தான் ''வெற்றி''
என்று தொடையைத் தட்டித்
தமையனுக்குக் காட்டினான்.
குறிப்பறிய மாட்டாதவன்
நன்மரம் என்பர்; வீமன்
குறிப்பு உணர்ந்து குறிவைத்தான்.

கதை கொண்டு அவன் தொடைச்
சதையைத் தாக்கினான்;
கவிதை யாப்புக் கட்டுப்பாடு இன்றிச்
சிதைந்து சீரழிந்தது.
தொடை அவன் உயிர்நாடி

அது நடுங்கியது; அவன்
வலி ஒடுங்கியது; குருதி
அவன் கொடுமையைப் போல்
பீறிட்டு வெளிப்பட்டது.

வீமன் தன் வஞ்சினம் முடித்தான்.
மற்றவர்களும் போரில்தம்
சூள் உரைகளை முடித்துத் தந்தனர்
வீரமகள் துருபதி வீறிட்டு எழுந்தாள்.

களத்தைப் பார்த்துக்
கண் சிவந்தாள்.
அவன் குருதி கண்டு
உள்ளம் குளிர்ந்தாள்.
அவள் வெறி அடங்கியது.

''அந்தக் குருதியைத் தீண்டுவதும்
குரூரம்; தகாது'' என விட்டாள்.
அவள் தன் விரித்த கூந்தலை
வாரி முடித்தாள்; சூள் முடித்தாள்

போர் முடிந்தது; ஆட்சி
பாண்டவர் கைக்கு வந்தது,
அவர்கள் காலமும் முடிந்தது.
அபிமன்யுவின் ஒரே மகன்
பரீட்சித்து; அவன் அந்த
வமிச வாரிசு ஆயினான்;
அரச வமிசம் தொடர்ந்து நின்றது.